அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ प्रश्नोत्तररत्नमालिका ॥

# ப்ரஶ்ஞோத்தர ரத்னமாலிகா

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1973



॥ श्रीगुरुभ्यो नमः ॥

॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளின் அனுக்ரஹத்தினுல் அமைக்கப்பட்ட அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் முக்கிய நோக்கம் ஸ்ரீ பகவத்பாதாளின் க்ரந்தங்களை அனுவாதத்துடன் பிரசுரித்து குறைந்த விலையில் எல் லோருக்கும் கிடைக்கும்படி செய்து ஆசார்யாளுடைய உபதேசங்களை எங்கும் பரவ ச்செய்வதே. இந்நோக்கத்துடன் பிரசுரிக்கப்படும் **"ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா"** வின் **'ப்ரஶ்னோத்தர ரத்னமாலிகா'** இது.

இதற்குப் பதவுரையும் கருத்துரைகளையும் எழுதித்தந்ததுடன், அச்சுக்குத் தயார் செய்து கொடுத்து மிகுந்த கவனத்துடன் பிழையில்லாமல் புஸ்தகம் வெளி வருவதற்கு மிகுந்த உதவிபுரிந்த **ஸ்ரீ K.S. வெங்கடராம சாஸ்திரிகள்** (உதவி ஆசிரியர் 'ஸ்ரீ சங்கர க்ருபா') அவர்களுக்கும், அழகிய முறையில் அச்சிட்டுத்தந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸம் அச்சகத்தாருக்கும் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**K.V. சுப்பரத்னம்**,
பொதுக் காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

॥ श्रीः ॥

॥ ஸ்ரீ: ॥

# ॥ प्रश्नोत्तररत्नमालिका ॥

# ப்ரஶ்னோத்தர ரத்னமாலிகா

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

**कः खलु नालंक्रियते दृष्टादृष्टार्थसाधनपटीयान् ।**
**अमुया कण्ठस्थितया प्रश्नोत्तररत्नमालिकया ॥ १ ॥**

**க: க²லு நாலங்க்ரியதே த்³ருஷ்டாத்³ருஷ்டார்த² ஸாத⁴ன படீயான் ।**
**அமுயா கண்ட²ஸ்தி²தயா ப்ரஶ்னோத்தர ரத்ன மாலிகயா ॥ 1 ॥**

| | | |
|---|---|---|
| **दृष्टादृष्टार्थसाधनपटीयान्** <br> **த்³ருஷ்டாத்³ருஷ்டார்த² ஸாத⁴ன படீயான்** | = | திருஷ்டமாயும் அதிருஷ்டமாயுமுள்ள விஷயங் களை ஸம்பாதிப்பதில் திறமையுள்ள, |
| **खलु** <br> **க²லு** | = | எவன்தான், |
| **कण्ठस्थितया** <br> **கண்ட²ஸ்தி²தயா** | = | கழுத்தில் தரித்துள்ள, |
| **अमुया** <br> **அமுயா** | = | இந்த, |
| **प्रश्नोत्तररत्नमालिकया** <br> **ப்ரஶ்னோத்தர ரத்ன மாலிகயா** | = | பிரச்நோத்தர ரத்ன மாலையினால், |
| **न अलंक्रियते** <br> **ந அலங்க்ரியதே** | = | அலங்கரிக்கப்படவில்லை. |

இவ்வுலகிலுள்ள திருஷ்டமான (கண்ணால் காணக்கூடிய) ஸுகபோகங்களையும் பரலோகத்திலுள்ள அதிருஷ்டமான (இப்பொழுது காணமுடியாத) ஸுகபோகங்களையும் அடைவதற்கு வேண்டிய ஸாதனங்களை ஸம்பாதிப்பதில் ஒருவனுக்கு திறமையிருக்குமானால் கட்டாயம் அவன் இந்த ப்ரச்நோத்தர ரத்னமாலிகையை தன் கழுத்தில் தரித்துக்கொண்டு தன்னை அலங்கரித்துக்கொள்வான். கேள்வி - பதில் ரூபமாக அமைந்துள்ள இந்நூலில் ரத்னம்போன்ற பல கேள்விகளும் பதில்களும் இருப்பதால் பல ரத்னங்கள் கோர்க்கப்பட்ட மாலை இது. இதிலுள்ள சுலோகங்களை நெட்டுருப்பண்ணி இம் மாலையைக் கண்டஸ்தமாக வைத்துக்கொள்வதுடன் இதன் கருத்துக்களையும் நன்கு புரிந்துகொண்டு மனதில் தரித்துக் கொண்டால்தான் இம்மாலை இவனுக்கு அலங்காரமாகும். இங்கு காட்டிய பதிலில் கூறியபடி வாழ்க்

கையை நடத்தி வந்தால் இஹலோக ஸுகத்தையும் பரலோக ஸுகத்தையும் அடையலாம். (1)

**भगवन्किमुपादेयं गुरुवचनं हेयमपि च किमकार्यम् ।**
**को गुरुरधिगततत्त्वः शिष्य हितायोद्यतः सततम् ॥ २ ॥**

**ப⁴க³வன் கிமுபாதே³யம் கு³ருவசனம் ஹேயமபி ச கிமகார்யம் ।**
**கோ கு³ரு: ரதி⁴க³ததத்த்வ: ஶிஷ்ய ஹிதாய உத்³யத: ஸததம் ॥ 2 ॥**

**भगवन् किं उपादेयं** = பகவானே, எது ஏற்றுக்கொள்ளத் தக்கது?
**ப⁴க³வன் கிம் உபாதே³யம்**
**गुरुवचनं** = குருவின் வார்த்தை,
**கு³ருவசனம்**
**हेयमपि च किं** = தள்ளத்தகுந்தது எது?
**ஹேயமபி ச கிம்**
**अकार्यं** = செய்யத்தகாதது,
**அகார்யம்**
**को गुरुः?** = யார் குரு?,
**கோ கு³ரு::**
**अधिगततत्त्वः** = உண்மையை அறிந்தவராயும்,
**அதி⁴க³ததத்த்வ:**
**सततं शिष्यहिताय उद्यतः** = எப்பொழுதும் சிஷ்யர்களின் நன்மைக்காக
**ஸததம் ஶிஷ்யஹிதாய உத்³யத:** முயற்சிப்பவராயும் இருப்பவர்.

நமக்கு நன்மை புரிபவர் ஆசார்யார். நம் நன்மையைக் கருதி நமக்கு அவர் உத்தரவு செய்வார். சிறிதும் ஆலோசியாமல் குரு சொன்ன வாக்யத்தை ஏற்றுக் கொண்டு அதன்படி நடக்கவேண்டும். அப்பொழுது நாம் நன்மையை அடையலாம்.

எதைச் செய்யக்கூடாது என்று சாஸ்திரங்களில் தடுக்கப் பட்டிருக்கிறதோ அதை இதுவரை தெரியாமல் செய்து வந்தாலும் விட்டுவிட வேண்டும். இனி செய்யக்கூடாது. அதனுல் பின்னர் கட்டாயம் தீங்குகள் ஏற்படும்.

தான் உண்மையை நன்கு அறிந்து சிஷ்யன் நன்மையை அடைவதற்காக எப்பொழுதும் முயற்சிக்கிறவன்தான் குருவாக இருக்கத் தகுதியுள்ளவன். இத்தகுதி யில்லாதவர் குருவாக ஆகமாட்டார். (2)

**त्वरितं किं कर्तव्यं विदुषां संसारसन्ततिच्छेदः ।**
**किं मोक्षतरोर्बीजं सम्यक्ज्ञानं क्रियासिद्धम् ॥ ३ ॥**

**த்வரிதம் கிம் கர்தவ்யம் விது[3]ஷாம் ஸம்ஸார ஸந்ததிச்சே[2]த[3]: ।**
**கிம் மோக்ஷ தரோர் பீ[3]ஜம் ஸம்யக் ஜ்ஞானம் க்ரியா ஸித்[3]த[4]ம் ॥ 3 ॥**

**विदुषां त्वरितं किं कर्तव्यं** = வித்வான்களுக்கு சீக்கிரம் எது செய்யத்தக்கது?
**விது[3]ஷாம் த்வரிதம் கிம் கர்தவ்யம்**

**संसारसन्ततिच्छेदः** = ஸம்ஸாரம் தொடர்ந்து வருவதை அறுப்பது,
**ஸம்ஸார ஸந்ததிச்சே[2]த[3]:**

**मोक्षतरोः किं बीजं** = மோக்ஷம் என்னும் மரத்திற்கு விதை எது?
**மோக்ஷதரோ: கிம் ர்பீ[3]ஜம்**

**क्रियासिद्धम् सम्यक्ज्ञानं** = ஸாதானுஷ்டானத்தால் ஏற்படும் தத்வஞானம்
**க்ரியாஸித்[3]த[4]ம் ஸம்யக்ஜ்ஞானம்**

படித்தவன் பிறவி - மரணம் என்னும் ஸம்ஸாரம் தொடர்ந்து வருவதை வெகு சீக்கிரம் துண்டித்துவிடவேண்டும் மறுபடியும் தொடர்ந்து பிறவி மரணம் வராமலிருப்பதற்குத் தகுந்த காரியங்களை காலதாமதமில்லாமல் சீக்கிரம் செய்ய வேண்டும்.

நிஷ்காம கர்மானுஷ்டானம், சிரவண மனன நிதித்யாஸனங்கள் முதலான ஸாதனங்களை அனுஷ்டித்து அதனுல் ஏற்பட்ட நல்ல ஞானம் (உண்மையான ஆத்ம ஞானம்) மோக்ஷமென்னும் மரத்திற்கு விதையாகும். பூமியில் விதையை ஊன்றினுல் மரம் முளைப்பதுபோல் தத்வ ஞானமிருந்தால் கட்டாயம் மோக்ஷம் கிடைக்கும்.

**कः पथ्यतरो धर्मः कः शुचिरिह यस्य मानसं शुद्धम् ।**
**कः पण्डितो विवेकी किं विषमवधीरणा गुरुषु ॥ ४ ॥**

**க: பத்[2]யதரோ த[4]ர்ம: க: ஶுசிரிஹ யஸ்ய மானஸம் ஶுத்[3]த[4]ம் ।**
**க: பண்டி[3]தோ விவேகீ கிம் விஷம் அவதீ[4]ரணு கு[3]ருஷு ॥ 4 ॥**

**कः पथ्यतरः** = மிகவும் ஹிதமானது எது?
**க: பத்[2]யதர:**

**धर्मः** = தர்மம்
**த[4]ர்ம:**

**इह शुचिः कः** = இங்கு சுத்தமானவன் யார்?
**இஹ ஶுசி: க:**

**यस्य मानसं शुद्धम्** = எவனுடைய மனம் சுத்தமாயிருக்கிறதோ
**யஸ்ய மானஸம் ஶுத்[3]த[4]ம்**

**पण्डितः कः** = பண்டிதர் யார்?
**பண்டி[3]த: க:**

**विवेकी** = பகுத்தறிவுள்ளவன்

**விவேகீ**

**किं विषम्** = எது விஷம்?

**கிம் விஷம்**

**गुरुषु अवधीरणा** = பெரியோர்களிடம் அவமதித்தல்

**கு³ருஷு அவதீ⁴ரணா**

உலகில் நமக்கு மிகவும் ஹிதமானது தர்மம்தான். இது தான் நன்மையைத் தரும். அதர்மம் ப்ரியமாயிருந்தாலும் தீமையை விளைவிக்கும். எவனுக்குக் காம க்ரோதாதி தோஷங்கள் நீங்கி மனது தூய்மை பெற்றுள்ளதோ, அவன் தான் சுத்தன். சரீரம் சுத்தமாயிருந்தாலும் மனஸ் சுத்தமாக இல்லாவிட்டால் அவன் அசுத்தன். புறத்தூய்மையும் வேண்டியதுதான். ஆனாலும் அகத்தூய்மை முக்யமானது.

இது செய்யத்தகுந்தது, இது செய்யத்தகாதது என்ற விவேகமுள்ளவன்தான் பண்டிதன். விவேகமில்லாவிட்டால் படித்தும் பயனில்லை. குரு முதலான பெரியோர்களை அவமதிப்பதுதான் விஷம். அழிவைத் தரும் மற்ற விஷங்களைப் போக்கி விடலாம். ஆனால் இதிலிருந்து தப்பமுடியாது. **(4)**

## किं संसारे सारं बहुशोऽपि विचिन्त्यमानमिदमेव ।
## किं मनुजेष्विष्टतमं स्वपरहितायोद्यतं जन्म ॥ ५ ॥

**கிம் ஸம்ஸாரே ஸாரம் ப³ஹுஶோ(அ)பி விசிந்த்யமானம் இத³மேவ ।**
**கிம் மனுஜேஷு இஷ்டதமம் ஸ்வ பர ஹிதாய உத்³யதம் ஜன்ம ॥ 5 ॥**

**संसारे किं सारं** = ஸம்ஸாரத்தில் எது ஸாரம்?

**ஸம்ஸாரே கிம் ஸாரம்**

**बहुशोऽपि विचिन्त्यमानं इदमेव** = பலவாறாக ஆராயப்படுவது என்ற

**ப³ஹுஶோ(அ)பி விசிந்த்யமானம் இத³மேவ** இதுதான்

**मनुजेष्ट किं इष्टतमं** = மனிதர்களில் மிகவும் விரும்பத்தக்கது எது?

**மனுஜேஷ்ட கிம் இஷ்டதமம்**

**स्वपरहिताय उद्यतं जन्म** = தனக்கும் பிறருக்கும் நன்மைக்காக

**ஸ்வபரஹிதாய உத்³யதம் ஜன்ம** முயற்சிக்கும் பிறவி

ஸம்ஸாரத்தில் ஸாரமானது, இதைப்பற்றி பலதடவை நன்கு சிந்திப்பது, தான். சிந்திக்கச்சிந்திக்க ப்ரபஞ்சத்தில் உள்ள தோஷங்களெல்லாம் நன்றாகத் தெரிந்து வைராக்யம் ஏற்படும். ஆலோசிக்காதவர்களுக்கு ஆசை வலுப்படும். தனக்கும் பிறருக்கும் நன்மை புரிவதில் ஈடுபடுவது தான் பிறவியின் பயனாகும் இது எல்லா பாலும் வேண்டத்தக்கது.

**मदिरेव मोहजनकः कः स्नेहः के च दस्यवो विषयाः ।**
**का भववल्ली तृष्णा को वैरी यस्त्वनुद्योगः ॥ ६ ॥**

**மதி³ரேவ மோஹ ஜனகঃ கঃ ஸ்னேஹঃ கே ச த³ஸ்யவோ விஷயாঃ ।**
**கா ப⁴வவல்லீ த்ருஷ்ணு கோ வைரீ யஸ்து அனுத்³யோக³ঃ ॥ 6 ॥**

| | | |
|---|---|---|
| **मदिरा इव मोहजनकः कः** | = | மத்யத்தைப்போல் மதிமயக்கத்தை |
| **மதி³ரா இவ மோஹஜனகঃ கঃ** | | உண்டுபண்ணுவது எது? |
| **स्नेहः** | = | அபிமானம் |
| **ஸ்னேஹঃ** | | |
| **दस्यवः च के** | = | திருடர்கள் யார்? |
| **த³ஸ்யவঃ ச கே** | | |
| **विषयाः** | = | விஷயங்கள் |
| **விஷயாঃ** | | |
| **भववल्ली का** | = | பிறப்பைக் கொடுக்கும் கொடி எது? |
| **ப⁴வவல்லீ கா** | | |
| **तृष्णा** | = | ஆசை |
| **த்ருஷ்ணு** | | |
| **वैरी कः?** | = | எதிரி யார்? |
| **வைரீ கঃ?** | | |
| **यस्तु अनुद्योगः** | = | முயற்சியில்லாமை எதுவோ (அது) |
| **யஸ்து அனுத்³யோக³ঃ** | | |

கள்ளைப்போல மனதில் மயக்கத்தை உண்டுபண்ணுவது அபிமானம்தான். உலக விஷயங்கள் மனதை மயக்கி விவேகம் முதலான சிறந்த பொருள்களை அபஹரிப்பதால் திருடர்கள். ஆசைதான் பிறவியெனனும் பலனைக்கொடுக்கும் கொடி. ஆசையால்தான் பிறவி ஏற்படுகிறது. நல்ல காரியங்களைச் செய்வதில் முயற் சிக்காமல் இருப்பதுதான் நம்மிடமே இருந்துகொண்டு நம்மை அழிக்கும் எதிரி. **(6)**

**कस्माद्भयमिह मरणादन्धादिह को विशिष्यते रागी ।**
**कः शूरो यो ललनालोचनबाणैर्न च व्यथितः ॥ ७ ॥**

**கஸ்மாத்³ ப⁴யம் இஹ மரணாத்³ அந்தா⁴தி³ஹ கோ விஶிஷ்யதே ராகீ³ ।**
**கঃ ஶூரோ யோ லலனா லோசன பா³ணைர் ந ச வ்யதி⁴தঃ ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| **इह कस्मात् भयम्** | = | இங்கு எதிலிருந்து பயம்? |
| **இஹ கஸ்மாத் ப⁴யம்** | | |
| **मरणात्** | = | சாவிலிருந்து |
| **மரணாத்** | | |

**इह अन्धात् कः विशिष्यते** = இங்கு குருடனைக் காட்டிலும் எவன்
**இஹ அந்தா⁴த் க: விஶிஷ்யதே** மேற்பட்டவனாயிருக்கிறான்!

**रागी** = ஆசையுள்ளவன்
**ராகீ³**

**शूरः कः?** = சூரன் யார்?
**ஶூர: க:?**

**यः ललनालोचनबाणैर्न च व्यधितः** = எவன் பெண்களின் கடாக்ஷமாகிற
**ய: லலனாலோசனபா³ணைர்ன ச வ்யதி⁴த:** அம்புகளால் அடிபடாதவனோ

மரணத்திலிருந்துதான் எல்லோருக்கும் பயம் ஏற்படுகிறது. ஆசையுள்ளவனுக்கு விவேகம் என்னும் கண் பார்வை நீங்கி விடுகிறபடியால் இவனே பெரிய குருடன். அழகிய பெண்களின் கண்களாகிற பாணத்தால் துன்பப்படாதவன் சூரன். சரீரத்தில் வலுவிருந்தாலும் பெண்களின் பார்வைக்கு மயங்கி விட்டால் அவன் கோழை. **(7)**

**पातुं कर्णाञ्जलिभिः किममृतमिह युज्यते सदुपदेशः ।**
**किं गुरुताया मूलं यदेतदप्रार्थनं नाम ॥ ८ ॥**

**பாதும் கர்ணாஞ்ஜலிபி⁴: கிமம்ருதமிஹ யுஜ்யதே ஸது³பதே³ஶ: ।**
**கிம் கு³ருதாயா மூலம் யதே³தத³ப்ரார்த²னம் நாம ॥ 8 ॥**

**इह कर्णाञ्जलिभिः पातुं** = இங்கு அஞ்ஜலிபோன்ற காதுகளால்
**இஹ கர்ணாஞ்ஜலிபி⁴: பாதும்** குடிப்பதற்கு

**किं अमृतं युज्यते** = எந்த அமிருதம் தகுதியுள்ளது?
**கிம் அம்ருதம் யுஜ்யதே**

**सदुपदेशः** = நல்லோர்களின் உபதேசம்
**ஸது³பதே³ஶ:**

**गुरुतायाः मूलं किं** = பெருந்தன்மைக்கு மூல காரணம் எது?
**கு³ருதாயா: மூலம் கிம்**

**यत् अप्रार्थनं नाम एतत्** = வேண்டாமலிருப்பது என்பது எதுவோ இது.
**யத் அப்ரார்த²னம் நாம ஏதத்**

நல்லோர்களின் உபதேச வார்த்தை அமிருதம். அமிருதம் கிடைத்தால் இரு கைகளாலும் நிறையப் பருகுவதில் ப்ரீதியுடன் ஈடுபடுவதுபோல், இரு காதுகளாலும் ஸாதுக்களின் உபதேசத்தை நிறையக் கேட்கவேண்டும். போதுமென்ற எண்ணமே ஏற்படக்கூடாது. பிறரிடம் யாசிக்காமலிருப்பது தான் பெருந்தன்மைக்கு மூலகாரணம். **(8)**

**किं गहनं स्त्रीचरितं कश्चतुरो यो न खण्डितस्तेन ।**
**किं दु:खं असन्तोष: किं लाघवमधमतो याच्ञा ॥ ९ ॥**

**கிம் க³ஹனம் ஸ்த்ரீசரிதம் கஶ்சதுரோ யோ ந க²ண்டி³தஸ்தேன ।**
**கிம் து³:க²ம் அஸந்தோஷ: கிம் லாக⁴வமத⁴மதோ யாச்ஞா ॥ 9 ॥**

| | | |
|---|---|---|
| **गहनं किं** <br> **க³ஹனம் கிம்** | = | அறியமுடியாதது எது? |
| **स्त्रीचरितं** <br> **ஸ்த்ரீசரிதம்** | = | பெண்களின் நடத்தை |
| **क: चतुर:** <br> **க: சதுர:** | = | எவன் திறமைசாலி? |
| **य: तेन न खण्डित:** <br> **ய: தேன ந க²ண்டி³த:** | = | எவன் அந்த ஸ்திரீகளின் நடத்தையால் பேதிக்கப்படவில்லையோ அவன். |
| **दु:खं किं** <br> **து³:க²ம் கிம்** | = | துன்பம் எது? |
| **असन्तोष:** <br> **அஸந்தோஷ:** | = | ஸந்தோஷமில்லாமை |
| **किं लाघवम्** <br> **கிம் லாக⁴வம்** | = | சிறுமைத்தனம் எது? |
| **अधमतो याच्ञा** <br> **அத⁴மதோ யாச்ஞா** | = | தாழ்ந்தவனிடம் யாசிப்பது. |

பெண்களின் நடத்தையை ஸுலபமாகப் புரிந்துகொள்ள முடியாது. பெண்களின் லீலாவிலாஸங்களால் எவன் மனம் பேதிக்கவில்லையோ, அவனே திறமையுள்ளவன். மனதில் ஸந்தோஷம் (திருப்தி) இல்லாமைதான் துன்பம். தாழ்ந்தவர்களிடம் யாசிப்பது அல்பத்தனம். **(9)**

**किं जीवितमनवद्यं किं जाड्यं पाठतोऽप्यनभ्यास: ।**
**को जागर्ति विवेकी का निद्रा मूढता जन्तो: ॥ १० ॥**

**கிம் ஜீவிதம் அனவத்³யம் கிம் ஜாட்³யம் பாட²தோ(அ)ப்யனப்⁴யாஸ: ।**
**கோ ஜாக³ர்தி விவேகீ கா நித்³ரா மூட⁴தா ஜந்தோ: ॥ 10 ॥**

| | | |
|---|---|---|
| **किं जीवितम्** <br> **கிம் ஜீவிதம்** | = | எது வாழ்க்கை? |
| **अनवद्यं** <br> **அனவத்³யம்** | = | தோஷமில்லாமை |

**किं जाड्यं** = ஜடத்தன்மை எது?

**கிம் ஜாட்³யம்**

**पाठतोपि अनभ्यासः** = படிப்பதில் அப்யாஸம் செய்யாமை

**பாட²தோபி அனப்⁴யாஸः**

**को जागर्ति** = எவன் விழித்துக்கொண்டிருக்கிறுன்?

**கோ ஜாக³ர்தி**

**विवेकी** = விவேகமுள்ளவன்

**விவேகீ கா**

**जन्तोः का निद्रा** = பிராணிக்கு எது தூக்கம்?

**ஜந்தோः கா நித்³ரா**

**मूढता** = மூடத்தன்மை

**மூட⁴தா**

குற்றமில்லாமல் நடப்பதுதான் சீரிய வாழ்க்கை. வித்யாப்யாஸம் செய்யாமலிருப்பது ஜாட்யம். விவேகமுள்ளவன் எப்பொழுதும் விழித்துக்கொண்டிருக்கிறுன். தவறைச் செய்ய மாட்டான். முட்டாள் தனம் தான் தூக்கம். இவன் அறியாமையால் தவறைச் செய்துகொண்டேயிருப்பான். **(10)**

**नलिनीदलगतजलवत्तरलं किं यौवनं धनं चायुः ।**

**कथय पुनः के शशिनः किरणसमाः सज्जना एव ॥ ११ ॥**

**நலினீ த³ல க³த ஜலவத் தரலம் கிம் யௌவனம் த⁴னம் சாயுः ।**

**கத²ய புனः கே ஶஶினः கிரணஸமாः ஸஜ்ஜனு ஏவ ॥ 11 ॥**

**नलिनीदलगत जलवत्** = தாமரை இலையில் உள்ள ஜலம் போல

**நலினீத³லக³த ஜலவத்**

**तरलं किं** = சஞ்சலமானது எது?

**தரலம் கிம்**

**यौवनं धनं आयुश्च** = வாலிபப் பருவமும், பணமும், ஆயுளும்

**யௌவனம் த⁴னம் ஆயுஶ்ச**

**के पुनः शशिनः किरणसमाः कथय** = சந்திரனுடைய கிரணத்திற்கு

**கே புனः ஶஶினः கிரணஸமாः கத²ய** ஸமமானவர்கள் யார்? சொல்.

**सज्जना एव** = நல்ல மனிதர்கள் தான்

**ஸஜ்ஜனு ஏவ**

வாலிபப்பருவம், பொருள், ஆயுள் இம்மூன்றும் நிலைத்து இருக்காது தாமரை இலையிலுள்ள தண்ணீர் உருண்டு ஓடி விடுவதுபோல் இம்மூன்றும் எந்த நிமிஷமும் நம்மைவிட்டு நீங்கிவிடும். சந்திரனுடைய குளிர்ந்த கிரணங்கள் சரீரத்தில் உள்ள தாபத்தைப் போக்கி மனதிற்கு ஆஹ்லாதத்தைக் கொடுப்பதுபோல் ஸாது ஜனங்கள்

பிறர் துன்பங்களைப் போக்கி இன்பத்தை உண்டுபண்ணுவதால் இவர்கள் சந்திரனின் நிலவுக்கு ஒப்பானவர்கள். **(11)**

## को नरकः परवशता किं सौख्यं सर्वसङ्गविरतिर्या ।
## किं सत्यं भूतहितं प्रियं च किं प्राणिनामसवः ॥ १२ ॥

**கோ நரக: பரவஶதா கிம் ஸௌக்2யம் ஸர்வ ஸங்க3 விரதிர் யா ।**
**கிம் ஸத்யம் பூ4தஹிதம் ப்ரியம் ச கிம் ப்ராணிநாம் அஸவ: ॥ 12 ॥**

**नरकः कः** = நரகம் எது?
**நரக: க:**

**परवशता** = பிறருக்குக் கட்டுப்பட்டிருப்பது
**பரவஶதா**

**सौख्यं किं** = ஸௌக்யம் எது?
**ஸௌக்2யம் கிம்**

**या सर्वसङ्गविरति** = எல்லாப் பற்றுதலையும் ஒழித்து விடுவது
**யா ஸர்வஸங்க3விரதி** எதுவோ (அது)

**किं सत्यं** = எது உண்மை?
**கிம் ஸத்யம்**

**भूतहितं** = பிராணிகளுக்கு நன்மை பயப்பது
**பூ4தஹிதம்**

**प्राणिनामसवः च किं प्रियं** = பிராணிகளுக்கு எது பிரியம்?
**ப்ராணிநாமஸவ: ச கிம் ப்ரியம்**

**असवः** = பிராணன்கள்.
**அஸவ:**

பிறருக்குக் கட்டுப்பட்டிருப்பது நரகம். எல்லாப்பொருள்களிலும் பற்றுக்கொள்ளாமல் வைராக்யத்துடன் இருப்பது ஸௌக்யத்தைக் கொடுக்கும். ப்ராணிகளுக் கு நன்மை பயக்கும் சொல்தான் ஸத்யமாகும். ப்ராணிகளுக்கு மிகவும் ப்ரியமானது ப்ராணன். **(12)**

## कोऽनर्थफलो मानः का सुखदा साधुजनमैत्री ।
## सर्वव्यसनविनाशे को दक्षः सर्वथा त्यागी ॥ १३ ॥

**கோ(அ)னர்த2 ப2லோ மான: கா ஸுக2தா3 ஸாது4 ஜன மைத்ரீ ।**
**ஸர்வ வ்யஸன விநாஶே கோ த3க்ஷ: ஸர்வதா2 த்யாகீ3 ॥ 13 ॥**

**अनर्थफलः कः** = துன்பத்தைப் பயனாக உடையது எது?
**அனர்த2ப2ல: க:**

**मानः** = அஹங்காரம்
**மான:**

**सुखदा का** = ஸுகத்தைக் கொடுக்கக்கூடியது எது?
**ஸுக2தா கா**

**साधुजनमैत्री** = ஸாது ஜனங்களின் நட்பு
**ஸாது4 ஜன மைத்ரீ**

**सर्वव्यसनविनाशे को दक्षः** = எல்லா துக்கங்களையும் போக்குவதில் எவன் ஸமர்த்தன்?
**ஸர்வ வ்யஸன விநாஶே கோ த3க்ஷ**

**सर्वथा त्यागी** = எல்லாவிதத்திலும் தியாகம்செய்கிறவன்
**ஸர்வதா2 த்யாகீ3**

கர்வம் கொண்டால் அவனுக்குத் துன்பமேதான் வரும். நல்லோர்களுடன் நட்புக்கொள்வது ஸுகத்தைக் கொடுக்கும். தியாக உணர்ச்சியுள்ளவனுக்கு எல்லாத் துன்பங்களையும் போக்கிக்கொள்ளும் திறமை உண்டு. பற்றுள்ளவர்கள் வேண்டிய பொருள் நீங்கும்போதும் வேண்டாத பொருள் வந்தபோதும் துன்புறுவார்கள். தியாகி எது வந்தாலும் எது போனாலும் சிறிதும் துன்புறமாட்டான். **(13)**

**किं मरणं मूर्खत्वं किं चानर्घं यदवसरे दत्तम् ।**
**आमरणात् किं शल्यं प्रच्छन्नं यत्कृतं पापम् ॥ १४ ॥**

**கிம் மரணம் மூர்க2த்வம் கிம் சானர்க4ம் யத3வஸரே த3த்தம் ।**
**ஆமரணாத் கிம் ஶல்யம் ப்ரச்ச2ன்னம் யத் க்ருதம் பாபம் ॥ 14 ॥**

**किं मरणं** = எது மரணம்?
**கிம் மரணம்**

**मूर्खत्वं** = முட்டாள்தனம்
**மூர்க2த்வம்**

**किं च अनर्घं** = எது விலைமதிக்க முடியாதது?
**கிம் ச அனர்க4ம்**

**यत् अवसरे दत्तं** = தக்க சமயத்தில் எது கொடுக்கப் பட்டதோ அது
**யத் அவஸரே த3த்தம்**

**आमरणात् किं शल्यं** = சாவுவரை எது துன்புறுத்துவது
**ஆமரணாத் கிம் ஶல்யம்**

**प्रच्छन्नं यत्कृतं पापम्** = ரஹஸ்யமாகச் செய்யப்பட்ட பாபம் எதுவோ அது.
**ப்ரச்ச2ன்னம் யத் க்ருதம் பாபம்**

மூடத்தன்மையே மரணம். முட்டாளுக்கு அவமானத்தால் மரணம் போன்ற வேதனை எப்பொழுதும் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும்.

தக்க சமயத்தில் பிறருக்கு உபயோகப்படும்படியாகக் கொடுக்கும் பொருள் விலை மதிப்பற்றது.

பிறருக்குத் தெரியாமல் ரஹஸ்யமாகச் செய்யும் பாபம் மரணம் வரை உடலில் பாய்ந்த அம்புபோல் துன்புறுத்திக்கொண்டேயிருக்கும். **(14)**

## कुत्र विधेयो यत्नो विद्याभ्यासे सदौषधे दाने ।
## अवधीरणा क्व कार्या खलपरयोषित्परधनेषु ॥ १५ ॥

**குத்ர விதே4யோ யத்னோ வித்3யாப்4யாஸே ஸதௌ3ஷதே4 தா3னே ।**
**அவதீ4ரணா க்வ கார்யா க2ல பர யோஷித் பரத4னேஷு ॥ 15 ॥**

**कुत्र यत्नो विधेयः** = எதில் முயற்சி செய்யத்தக்கது

**குத்ர யத்னோ விதே4ய:**

**विद्याभ्यासे सदौषधे दाने** = கல்வி கற்பதிலும், நல்ல மருந்துகளை

**வித்3யாப்4யாஸே ஸதௌ3ஷதே4 தா3னே** ஸேவிப்பதிலும், கொடுப்பதிலும்

**क्व अवधीरणा कार्या** = எதில் அலக்ஷ்யம் செய்யத்தக்கது?

**க்வ அவதீ4ரணா கார்யா**

**खलपरयोषित्परधनेषु** = துஷ்டன், பிறர் மனைவி, பிறர் பொருள்

**க2ல பர யோஷித் பரத4னேஷு** இவைகளில்.

கல்வி கற்பதிலும் கற்பதிலும் நல்ல மருந்துகளை ஸேவிப்பதிலும் பிறருக்குப் பொருள் கொடுப்பதிலும் எப்பொழுதும் முயற்சித்துக்கொண்டே இருக்கவேண்டும்.

துஷ்டன், பிறர் மனைவி, பிறர் பொருள் இவற்றில் மனதைச் செலுத்தக்கூடாது. இவர்களிடம் அலக்ஷ்யமாக உதாஸினமாக இருக்கவேண்டும். **(15)**

## काऽहर्निशमनुचिन्त्या संसारासारता न तु प्रमदा ।
## का प्रेयसी विधेया करुणा दीनेषु सजने मैत्री ॥ १६ ॥

**கா(அ)ஹர்நிஶமனுசிந்த்யா ஸம்ஸாராஸாரதா ந து ப்ரமதா3 ।**
**கா ப்ரேயஸீ விதே4யா கருணா தீ3னேஷு ஸஜ்ஜனே மைத்ரீ ॥ 16 ॥**

**का अहर्निशं अनुचिन्त्या** = இரவு பகலாக எது சிந்திக்கத்தக்கது?

**கா அஹர்நிஶம் அனுசிந்த்யா**

**संसारासारता** = ஸம்ஸாரத்தின் ஸாரமற்ற தன்மை

**ஸம்ஸாராஸாரதா**

**न तु प्रमदा** = ஸ்திரீ எண்ணத்தக்கதல்ல

**ந து ப்ரமதா3**

| | | |
|---|---|---|
| **का प्रेयसी विधेया** | = | மிகவும் பிரியமுள்ளதாகச் செய்யத்தக்கது எது? |
| **கா ப்ரேயஸீ விதே⁴யா** | | |
| **दीनेषु सजने मैत्री** | = | ஏழைகளிடம் இரக்கமும், ஸாது ஜனங்களிடம் |
| **தீ³னேஷு ஸஜ்ஜனே மைத்ரீ** | | நட்பும். |

இரவும் பகலும் எப்பொழுதும் இந்த ஸம்ஸாரத்தின் ஸாரமற்ற தன்மையைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்க வேண்டும். பெண்களை மனதால் நினைக்கவே கூடாது.

மிகவும் ப்ரியமுள்ளதாகச் செய்யத்தக்கது ஏழைகளிடம் இரக்கம் காட்டுவதும் ஸாது ஜனங்களிடம் நட்புக்கொள்வதும்.

**कण्ठगतैरप्यसुभिः कस्य ह्यात्मा न शक्यते जेतुम् ।**
**मूर्खस्य शङ्कितस्य च विषादिनो वा कृतघ्नस्य ॥ १७ ॥**

**கண்ட²க³தைரப்யஸுபி⁴: கஸ்ய ஹ்யாத்மா ந ஶக்யதே ஜேதும் ।**
**மூர்க²ஸ்ய ஶங்கிதஸ்ய ச விஷாதி³னோ வா க்ருதக்⁴னஸ்ய ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **कण्ठगतैः असुभिरपि** | = | கழுத்தில் வந்துள்ள பிராணன்களாலும் |
| **கண்ட²க³தை: அஸுபி⁴ரபி** | | |
| **कस्य आत्मा जेतुं न शक्यते** | = | எவனுடைய ஆத்மா ஜயிப்பதற்கு முடியாது? |
| **கஸ்ய ஆத்மா ஜேதும் ந ஶக்யதே** | | |
| **विषादिनो वा** | = | விஷத்தைச் சாப்பிட்டவனைப்போல் |
| **விஷாதி³னோ வா** | | |
| **मूर्खस्य शङ्कितस्य** | = | முட்டாளுடையவும், ஸந்தேஹிக்கிறவனுடை |
| **कृतघ्नस्य च** | | யவும் நன்றி மறந்தவனுடையவும். |

கழுத்தில் ப்ராணன் வரும்படி எவ்வளவு முயற்சித்த போதிலும் விஷம் சாப்பிட்டவனைப் பிழைக்கும்படிச் செய்யமுடியாததுபோல் முட்டாளையும் ஸந்தேஹப் ரக்ருதியுள்ளவனையும் நன்றி மறந்தவனையும் நல்வழியில் திருப்பிக் காப்பாற்ற முடியாது. **(17)**

**कः साधुः सद्वृत्तः कमधममाचक्षते त्वद्वृत्तम् ।**
**केन जितं जगदेतत्सत्यतितिक्षावता पुंसा ॥ १८ ॥**

**க: ஸாது⁴: ஸத்³வ்ருத்த: கமத⁴மமாசக்ஷதே த்வத்³வ்ருத்தம் ।**
**கேன ஜிதம் ஜக³தே³தத்ஸத்யதிதிக்ஷாவதா பும்ஸா ॥ 18 ॥**

| | | |
|---|---|---|
| **कः साधुः**<br>**கः ஸாது⁴ः** | = | யார் ஸாது? |
| **सद्वृत्तः**<br>**ஸத்³வ்ருத்தः** | = | நல்ல நடத்தையுள்ளவன் |
| **कं अधमं आचक्षते**<br>**கம் அத⁴மம் ஆசக்ஷதே** | = | யாரை அதமனாகச் சொல்கிறார்கள்? |
| **असद्वृत्तं**<br>**அஸத்³வ்ருத்தம்** | = | கெட்ட நடத்தையுள்ளவனை |
| **केन एतत् जगत् जितम्**<br>**கேன ஏதத் ஜக³த் ஜிதம்** | = | எவனால் இவ்வுலகம் ஜயிக்கப்பட்டது? |
| **सत्यतितिक्षावता पुंसा**<br>**ஸத்யதிதிக்ஷாவதா பும்ஸா** | = | உண்மையும் பொறுமையுமுள்ள மனிதனால் |

நல்ல நடத்தை உள்ளவன் ஸாது. கெட்ட நடத்தை உள்ளவன் அதமன். உண்மையும் பொறுமையுமுள்ள புருஷன் இவ்வுலகத்தை ஜயித்தவன். **(18)**

**कस्मै नमांसि देवाः कुर्वन्ति दयाप्रधानाय ।**
**कस्मादुद्वेगः स्यात्संसारारण्यतः सुधियः ॥ १९ ॥**

**கஸ்மை நமாம்ஸி தே³வாः குர்வந்தி த³யாப்ரதா⁴னாய ।**
**கஸ்மாத்³ உத்³வேக³ः ஸ்யாத் ஸம்ஸாராரண்யதः ஸுதி⁴யः ॥ 19 ॥**

| | | |
|---|---|---|
| **कस्मै देवाः नमांसि कुर्वन्ति**<br>**கஸ்மை தே³வாः நமாம்ஸி குர்வந்தி** | = | எவனுக்கு தேவர்கள் நமஸ்காரங்களைச் செய்கிறார்கள்? |
| **दयाप्रधानाय**<br>**த³யாப்ரதா⁴னாய** | = | இரக்கத்தை முக்யமாக கொண்டவனுக்கு |
| **सुधियः कस्मात् उद्वेगः स्यात्**<br>**ஸுதி⁴யः கஸ்மாத் உத்³வேக³ः ஸ்யாத்** | = | நல்ல புத்தியுள்ளவனுக்கு எதிலிருந்து பயம் ஏற்படும்? |
| **संसारारण्यतः**<br>**ஸம்ஸாராரண்யதः** | = | ஸம்ஸாரம் என்னும் காட்டிலிருந்து |

இரக்கத்தை ப்ரதானமாகக் கொண்டவனை தேவர்கள் வணங்குகிறார்கள் நற்புத்தி உள்ளவனுக்கு பிறவி மரணமாகிற ஸம்ஸாரம் என்னும் காட்டிலிருந்து தான் பயம். வேறு ஒன்றிலும் அவனுக்குப் பயம் கிடையாது. **(19)**

**कस्य वशे प्राणिगणः सत्यप्रियभाषिणो विनीतस्य ।**
**क्व स्थातव्यं न्याय्ये पथि दृष्टादृष्टलाभाढ्ये ॥ २० ॥**

**கஸ்ய வஶே ப்ராணிக³ண꞉ ஸத்ய ப்ரிய பா⁴ஷிணோ வினீதஸ்ய ।**
**க்வ ஸ்தா²தவ்யம் ந்யாய்யே பதி² த்³ருஷ்டாத்³ருஷ்ட லாபா⁴ட்⁴யே ॥ 20 ॥**

**कस्य वशे प्राणिगण:** = பிராணிகளின் கூட்டம் யாருக்குக்
**கஸ்ய வஶே ப்ராணிக³ண꞉** கட்டுப்பட்டுள்ளது?
**सत्यप्रिय भाषिणो विनीतस्य** = உண்மையான ப்ரிய வார்த்தையைப்
**ஸத்ய ப்ரிய பா⁴ஷிணோ வினீதஸ்ய** பேசுகிற வணக்கமுள்ளவனுக்கு
**क्व स्थातव्यं** = எங்கு நிலைபெற்றிருக்கவேண்டும்?
**க்வ ஸ்தா²தவ்யம்**
**दृष्टादृष्टलाभाढ्ये** = திருஷ்டமாயும் அதிருஷ்டமாயுமுள்ள
**த்³ருஷ்டாத்³ருஷ்ட லாபா⁴ட்⁴யே** பல லாபம் நிறைந்த
**न्याय्ये पथि** = நியாயமான வழியில்.
**ந்யாய்யே பதி²**

உண்மையாகவும் பிறருக்கு ப்ரியமாகவும் உள்ள வார்த்தைகளைப் பேசுகிறவனுக்கு எல்லா ஜனங்களும் கட்டுப்பட்டிருப்பார்கள். நியாயமான வழியில் செல்கிறவனுக்கு இவ்வுலகிலும் மேலுலகிலும் நல்ல பலன்கள் நிறையக் கிடைக்கும். ஆகவே நியாயமான வழியை விட்டு விலகிச் செல்லக்கூடாது.

**कोऽन्धो यो कार्यरत: को बधिरो यो हितानि न शृणोति ।**
**को मूको य: काले प्रियाणि वक्तुं न जानाति ॥ २१ ॥**

**கோ(அ)ந்தோ⁴ யோ கார்யரத꞉ கோ ப³தி⁴ரோ யோ ஹிதானி ந ஶ்ருணோதி ।**
**கோ மூகோ ய꞉ காலே ப்ரியாணி வக்தும் ந ஜானாதி ॥ 21 ॥**

**क: अन्ध:** = எவன் குருடன்?
**க꞉ அந்த⁴꞉**
**य: अकार्यरत:** = எவன் செய்யத்தகாத காரியத்தில்
**ய꞉ அகார்யரத꞉** ஈடுபட்டவனோ (அவன்).
**को बधिर:** = எவன் செவிடன்?
**கோ ப³தி⁴ர꞉**
**य: हितानि न शृणोति** = எவன் நன்மை தரும் வார்த்தைகளைக்
**ய꞉ ஹிதானி ந ஶ்ருணோதி** கேட்கவில்லையோ (அவன்)
**को मूक:** = எவன் ஊமை?
**கோ மூக꞉**
**य: काले प्रियाणि वक्तुं न जानाति** = எவன் தக்க ஸமயத்தில் ப்ரியத்தைப் பேசத்
**ய꞉ காலே ப்ரியாணி வக்தும் ந ஜானாதி** தெரிந்துகொள்ளவில்லையோ (அவன்).

செய்யத்தகாத காரியத்தைச் செய்வதில் ஈடுபட்டவன் குருடன். ஹிதமான வார்த்தைகளைப் பிறர் சொன்னாலும் கேட்காதவன் செவிடன். தக்க சமயத்தில் ப்ரியமான வார்த்தைகளைப் பேசத்தெரியாதவன் ஊமை. **(21)**

**किं दानमनाकाङ्क्षं किं मित्रं यो निवारयति पापात् ।**
**कोऽलङ्कारः शीलं किं वाचां मण्डनं सत्यम् ॥ २२ ॥**

**கிம் தா³னமனாகாங்க்ஷம் கிம் மித்ரம் யோ நிவாரயதி பாபாத் ।**
**கோ(அ)லங்காரః ஶீலம் கிம் வாசாம் மண்ட³னம் ஸத்யம் ॥ 22 ॥**

**किं दानं** = எது தானம்?
**கிம் தா³னம்**

**अनाकाङ्क्षं** = ஒன்றையும் விரும்பாமல் (கொடுப்பது.)
**அனாகாங்க்ஷம்**

**किं मित्रं** = யார் நண்பன்?
**கிம் மித்ரம்**

**यः पापात् निवारयति** = எவன் பாபச்செய்கையிலிருந்து
**யః பாபாத் நிவாரயதி** தடுக்கிறானோ (அவன்)

**अलङ्कारः कः** = எது அணிகலன்?
**அலங்காரః கః**

**शीलं** = நல்ல ஸ்வபாவம்
**ஶீலம்**

**वाचां मण्डनं किं** = வார்த்தைகளுக்கு அலங்காரம் எது?
**வாசாம் மண்ட கிம்**

**सत्यम्** = உண்மை.
**த்யம்**

ப்ரதிபலனை எதிர்பாராமல் கொடுப்பதுதான் தானமாகும். பாபச்செய்கையிலிருந்து தன்னைத் தடுப்பவன் தான் நண்பன். நல்ல ஸ்வபாவம் தான் அலங்காரம். உண்மைதான் வாக்குக்கு அணிகலன். **(22)**

**विद्युद्विलसितचपलं किं दुर्जनसंग तिर्युवतयश्च ।**
**कुलशीलनिष्प्रकम्पाः के कल्लिकालेऽपि सज्जना एव ॥ २३ ॥**

**வித்³யுத்³விலஸித சபலம் கிம் து³ர்ஜன ஸங்க³திர் யுவதயஶ்ச ।**
**குல ஶீல நிஷ்ப்ரகம்பாః கே கல்லிகாலே(அ)பி ஸஜ்ஜனா ஏவ ॥ 23 ॥**

**विद्युद्विलसितचपलं किं** = மின்னல்போல் சஞ்சலமானது எது?
**வித்³யுத்³விலஸித சபலம் கிம்**

**दुर्जनसंगतिः र्युवतयश्च** = கெட்ட ஜனங்களின் சேர்க்கையும் யுவதிகளும்

**து$^{3}$ர்ஜனஸங்க$^{3}$திः ர்யுவதயஶ்ச**

**कल्लिकालेपि** = கலிகாலத்திலும்

**கல்லிகாலேபி**

**कुलशीलनिष्प्रकम्पाः के** = தன் குலதர்மத்திலும் நல்ல ஸ்வபாவத்திலும்

**குல ஶீல நிஷ்ப்ரகம்பாः கே** மாறுதவர்கள் யார்?

**सज्जना एव** = நல்ல ஜனங்கள் தான்.

**ஸஜ்ஜனா ஏவ**

கெட்ட ஜனங்களின் நட்பு நிலைத்திருக்காது மின்னல் ஒளிபோல் திடீரென்று நட்பு பகையாக மாறிவிடும். இதுபோல் தான் பெண்களும் சஞ்சல ஸ்வபாவமுள்ளவர்கள். பெண்களின் மனது ஒன்றிலும் நிலைத்திருக்காது. மாறிக்கொண்டேயிருக்கும். கலிகாலத்திலும் ஸாதுக்கள் தம் குலம் ஸ்வபாவம் இவைகளுக்குத் தக்கபடிதான் நடப்பார்கள். இதிலிருந்து மாற மாட்டார்கள். **(23)**

**चिन्तामणिरिव दुर्लभमिह किं कथयामि तच्चतुर्भद्रम् ।**
**किं तद्वदन्ति भूयो विधुततमसा विशेषेण ॥ २४॥**

**சிந்தாமணிரிவ து$^{3}$ர்லப$^{4}$மிஹ கிம் கத$^{2}$யாமி தச்சதுர்ப$^{4}$த்$^{3}$ரம் ।**
**கிம் தத்$^{3}$வத$^{3}$ந்தி பூ$^{4}$யோ விது$^{4}$ததமஸா விஶேஷேண ॥ 24॥**

**दानं प्रियवाक्पहितं ज्ञानमगर्वं क्षमान्वितं शौर्यम् ।**
**वित्तं त्यागसमेतं दुर्लभमेतत्चतुर्भद्रम् ॥ २५ ॥**

**தா$^{3}$னம் ப்ரிய வாக் ஸஹிதம் ஜ்ஞானமக$^{3}$ர்வம் க்ஷமான்விதம் ஶௌர்யம் ।**
**வித்தம் த்யாக$^{3}$ ஸமேதம் து$^{3}$ர்லப$^{4}$மேதத் சதுர்ப$^{4}$த்$^{3}$ரம் ॥ 25 ॥**

**चिन्तामणिरिव** = நினைத்ததைக் கொடுக்கும் சிந்தாமணி போல்

**சிந்தாமணிரிவ**

**इह दुर्लभं किं** = இங்கு அடையமுடியாதது எது?

**இஹ து$^{3}$ர்லப$^{4}$ம் கிம்**

**कथयामि** = சொல்கிறேன்

**கத$^{2}$யாமி**

**तत् चतुर्भद्रम्** = அது (அடையமுடியாதது) சதுர்பத்ரம்

**தத் சதுர்ப$^{4}$த்$^{3}$ரம்**

**विधुततमसः** = அக்ஞானமில்லாத அறிவாளிகள்

**விது$^{4}$ததமஸः**

**भूयः विशेषेण वदन्ति** = திருப்பித்திருப்பி சிறப்பித்துக் கூறுகிறார்களே

**பூ$^{4}$யः விஶேஷேண வத$^{3}$ந்தி**

**किं तत्** = அது எது?
**கிம் தத்**
**प्रियवाक्सहितं दानं** = ப்ரியமாகப் பேசி தானம் செய்வது
**ப்ரிய வாக் ஸஹிதம் தா³னம்**
**अगर्वं ज्ञानं** = அஹங்காரமில்லாத அறிவு
**அக³ர்வம் ஜ்ஞானம்**
**क्षमान्वितं शौर्यम्** = பொறுமையுடன் கூடிய பராக்ரமம்
**க்ஷமான்விதம் ஶௌர்யம்**
**त्यागसमेतं वित्तं** = கொடையுடன் கூடிய பொருள்
**த்யாக³ ஸமேதம் வித்தம்**
**एतत् चतुर्भद्रं दुर्लभं** = இந்த நான்கு நன்மை தரும்
**ஏதத் சதுர்ப⁴த்³ரம் து³ர்லப⁴ம்** காரியங்கள் அடையமுடியாதவை.

நினைத்ததையெல்லாம் கொடுக்கும் சிந்தாமணி ரத்னத்தைப்போல சுலபமாக அடையமுடியாதது 'சதுர்பத்ரம்' (நன்மையைத் தரும் நான்கு காரியங்கள்) பிரியமான வார்த்தை சொல்லி தானம் செய்வது, அஹங்காரமில்லாத அறிவு, பொறுமையோடு கூடின வீர்யம், தியாகத்துடன் கூடிய பணம் இந்நான்கையும் சதுர் பத்ரமென்று அறிவாளிகள் மிகச் சிறப்பித்துக் கூறுகிறுர்கள் கடுமையாகப் பேசிக்கொடுக்கும் தானமும், கர்வத்துடன் கூடிய அறிவும், பொறுமையில்லாத வீர்யமும், பிறருக்குக் கொடுக்காமல் வைத்திருக்கும் பணமும் நன்மையைத் தராது தீமையைக் கொடுக் கும். **(24-25)**

**किं शोच्यं कार्पण्यं सति विभवे किं प्रशस्तमौदार्यम् ।**
**कः पूज्यो विद्वद्भिः स्वभावतः सर्वदा विनीतो यः ॥ २६ ॥**

**கிம் ஶோச்யம் கார்பண்யம் ஸதி விப⁴வே கிம் ப்ரஶஸ்தமௌதா³ர்யம் ।**
**க: பூஜ்யோ வித்³வத்³பி⁴: ஸ்வபா⁴வத: ஸர்வதா³ வினீதோ ய: ॥ 26 ॥**

**किं शोच्यं** = எது வருந்தத்தக்கது?
**கிம் ஶோச்யம்**
**विभवे कार्पण्यं सति** = பணம் இருக்கும்பொழுது கஞ்சத்தனம்
**விப⁴வே கார்பண்யம் ஸதி**
**किं प्रशस्तं** = எது சிறப்புள்ளது?
**கிம் ப்ரஶஸ்தம்**
**औदार्यं** = கொடுக்கும் ஸ்வபாவம்
**ஔதா³ர்யம்**
**विद्वद्भिः पूज्यः कः** = அறிவாளிகளால் கொண்டாடத்தக்கவன் யார்?
**வித்³வத்³பி⁴: பூஜ்ய: க:**

**यः स्वभावतः सर्वदा विनीतः** = எவன் இயற்கையாகவே எப்பொழுதும்
**யஃ ஸ்வபா⁴வதஃ ஸர்வதா³ வினீதஃ** விநயமுள்ளவனே

கார்பண்யம் (பிறருக்குச் சிறிதும் கொடுக்க மனம் வராமல் இருப்பது) மிகவும் வருந்தத்தக்கது. பணம் இருக்கும்பொழுது உதாரமனதுடன் பிறருக்கு கொடுப்பது தான் சிலாக்யமானது இயற்கையாகவே எப்பொழுதும் வணக்கத்துடன் கூடியவன் அறிவாளிகளால் கொண்டாடப்படுகிறான். **(26)**

## कः कुलकमलदिनेश सति गुणविभवेऽपि यो नम्रः ।
## कस्य वशे जगदेतत्प्रियहितवचनस्य धर्मनिरतस्य ॥ २७ ॥

**கஃ குல கமல தி³னேஶ ஸதி கு³ண விப⁴வே(அ)பி யோ நம்ரஃ ।**
**கஸ்ய வஶே ஜக³தே³தத் ப்ரிய ஹித வசனஸ்ய த⁴ர்ம நிரதஸ்ய ॥ 27 ॥**

**कुलकमलदिनेश कः** = வம்சமாகிற தாமரையை மலர வைக்கும் சூரியன்
**குல கமல தி³னேஶ கஃ** யார்?
**गुणविभवेऽपि यो नम्रः** = நற்குணங்களால் பெருமையுற்றபோதிலும் எவன்
**கு³ண விப⁴வே(அ)பி யோ நம்ரஃ** வணக்கமுள்ளவனே
**एतत् जगत्** = இந்த உலகம்
**ஏதத் ஜக³த்**
**कस्य वशे** = எவனுக்கு அதீனமாக உள்ளது?
**கஸ்ய வஶே**
**प्रियहितवचनस्य** = பிரியமாயும் ஹிதமாயும் உள்ள
**ப்ரியஹிதவசனஸ்ய** வார்த்தை பேசுகின்ற
**धर्मनिरतस्य** = தர்மத்தில் ஈடுபட்டவனுக்கு.
**த⁴ர்ம நிரதஸ்ய**

நற்குணங்களின் நிறைவினுல் பெருமையுள்ளபோதிலும் கர்வம் கொள்ளாமல் விநயமுள்ளவன், ஸூரியன் தாமரையை மலரச்செய்வதுபோல் தன் வம்சத்தை மலரச்செய்கிறுன் (சிறப்பிக்கிறான்) மனதுக்கு பிரியமாயும் நன்மை பயக்கிறதாயுமுள்ள வார்த்தையைப் பேசிக்கொண்டு தர்மத்திலேயே ஈடுபட்டவனுக்கு இவ்வுலகம் கட்டுப்பட்டிருக்கும். **(27)**

## विद्वन्मनोहरा का सत्कविता बोधवनिता च ।
## कं न स्पृशति विपत्तिः प्रवृद्धवचनानुवर्तिनं दान्तम् ॥ २८ ॥

**வித்³வன் மனோஹரா கா ஸத்கவிதா போ³த⁴ வனிதா ச ।**
**கம் ந ஸ்ப்ருஶதி விபத்திஃ ப்ரவ்ருத்³த⁴ வசனுனுவர்தினம் தா³ந்தம் ॥ 28 ॥**

**विद्वन्मनोहरा का** = அறிவாளிகளின் மனதை வசீகரிப்பது எது?

**வித்³வன் மனோஹரா**

**सत्कविता बोधवनिता** = நல்ல கவிதையும், ஞானம் என்னும் பெண்ணும்

**ஸத்கவிதா போ³த⁴ வனிதா**

**विपत्तिः कं न स्पृशति** = ஆபத்து யாரைத் தொடாது?

**விபத்திः கம் ந ஸ்ப்ருஶதி**

**प्रवृद्धवचनानुवर्तिनं दान्तम्** = பெரியோர்களின் வார்த்தைப்படி நடக்கிற

**ப்ரவ்ருத்³த⁴ வசனானுவர்தினம் தா³ந்தம்** அடக்கமுள்ளவனை.

நல்ல கவிதையும் அறிவு என்னும் பெண்ணும் வித்வான்களின் மனதைக் கவரக்கூடியது பெரியோர்களின் வார்த்தையின்படி நடக்கும் அடக்கமுள்ளவனுக்கு ஆபத்துக்கள் வராது. **(28)**

**कस्मै स्पृहयति कमला त्वनलसचित्ताय नीतिवृत्ताय ।**
**त्यजति च कं सहसा द्विजगुरुसुरनिन्दाकरं च सालस्यम् ॥ २९ ॥**

**கஸ்மை ஸ்ப்ருஹயதி கமலா த்வனலஸ சித்தாய நீதிவ்ருத்தாய ।**
**த்யஜதி ச கம் ஸஹஸா த்³விஜ கு³ரு ஸுர நிந்தா³கரம் ச ஸாலஸ்யம் ॥ 29॥**

**कमला कस्मै स्पृहयति** = லக்ஷ்மி யார்பொருட்டு ஆசைப்படுகிறாள்?

**கமலா கஸ்மை ஸ்ப்ருஹயதி**

**अनलसचित्ताय नीतिवृत्ताय** = சோம்பலில்லாத மனமுள்ள, நியாயமான

**அனலஸசித்தாய நீதிவ்ருத்தாய** நடத்தையுள்ளவன் பொருட்டு

**सहसा कं च त्यजति** = (லக்ஷ்மீ) திடீரென்று எவனை விட்டுவிடுகிறாள்?,

**ஸஹஸா கம் ச த்யஜதி**

**द्विजगुरुसुरनिन्दाकरं** = பிராமணர், ஆசார்யர் (பெரியோர்) தேவதை

**த்³விஜ கு³ரு ஸுர நிந்தா³கரம்** இவர்களை தூஷணை செய்கிறவனையும்

**सालस्यम् च** = சோம்பலுடன் கூடியவனையும்

**ஸாலஸ்யம் ச**

மனதில் சோம்பலில்லாமல் நியாயமான வழியில் செல்கிறவனிடம் லக்ஷ்மீ ஆசையுடன் வாஸம் செய்வாள். பிராமணர், ஆசார்யர் (பெரியோர்), தேவதை இவர்களை தூஷிக்கிறவனிடமும் சோம்பலுள்ளவனிடமும் லக்ஷ்மீ தங்கமாட்டாள். ஐசுவர்யம் போய்விடும். **(29)**

**कुत्र विधेयो वासः सज्जननिकटेऽथवा काश्याम् ।**
**कः परिहार्यो देशः पिशुनयुतो लुब्धभूपश्च ॥ ३० ॥**

**குத்ர விதே⁴யோ வாஸः ஸஜ்ஜன நிகடே(அ)த²வா காஶ்யாம் ।**
**கः பரிஹார்யோ தே³ஶः பிஶுனயுதோ லுப்³த⁴ பூ⁴பஶ்ச ॥ 30 ॥**

**कुत्र वासः विधेयः** = எங்கே வாஸம் செய்யவேண்டும்?

**குத்ர வாஸ: விதே⁴ய:**

**सज्जननिकटे अथवा काश्यां** = நல்ல ஜனங்களின் அருகில் அல்லது

**ஸஜ்ஜனநிகடே அத²வா காஶ்யாம்** காசி க்ஷேத்ரத்தில்

**कः देशः परिहार्यः** = எந்த தேசம் விலக்கத்தக்கது?

**க: தே³ஶ: பரிஹார்ய:**

**पिशुनयुतो लुब्धभूपश्च** = கோள் சொல்பவர்களுடன் கூடியதும்

**பிஶுனயுதோ லுப்³த⁴ பூ⁴பஶ்ச** லோபியான அரசனையுடையதும்

ஸாது ஜனங்களின் அருகில் அல்லது காசியில் வாஸம் செய்யவேண்டும். கோள் சொல்பவர்களும் ஔதார்யமில்லாத பேராசை கொண்ட அரசனும் இருக்கும் நாட்டில் வஸிக்கக் கூடாது. அதைவிட்டு வெளியேறிவிடவேண்டும். **(30)**

**केनाशोच्यः पुरुषः प्रणतकलत्रेण धीरविभवेन ।**
**इह भुवने कः शोच्यः सत्यपि विभवे न यो दाता ॥ ३१ ॥**

**கேநாஶோச்ய: புருஷ: ப்ரணத கலத்ரேண தீ⁴ரவிப⁴வேன ।**
**இஹ பு⁴வனே க: ஶோச்ய: ஸத்யபி விப⁴வே ந யோ தா³தா ॥ 31 ॥**

**केन पुरुषः अशोच्यः** = எதனால் மனிதன் வருந்தத்தகாதவனாகிறான்?

**கேன புருஷ: அஶோச்ய:**

**प्रणतकलत्रेण धीरविभवेन** = அடக்கமுள்ள மனைவியாலும்

**ப்ரணத கலத்ரேண தீ⁴ரவிப⁴வேன** தீரத்தன்மையாலும்

**इह भुवने कः शोच्यः** = இவ்வுலகில் எவன் வருந்ததக்கவன்?

**இஹ பு⁴வனே க: ஶோச்ய:**

**विभवे न यो दाता** = பணம் இருந்தும் எவன் கொடுக்கிறதில்லையோ.

**விப⁴வே ந யோ தா³தா**

அடக்கமுள்ள மனைவியும், தைர்யமுமிருந்தால் அவன் வருந்தத்தக்கவனல்ல. ஐசுவர்யமிருத்தும் கொடுக்காதவன் வருந்தத்தக்கவன். **(31)**

**किं लघुताया मूलं प्राकृतपुरुषेषु या याच्ञा ।**
**रामादपि कः शूरः स्मरारनिहतो न यश्चलति ॥ ३२ ॥**

**கிம் லகு⁴தாயா மூலம் ப்ராக்ருத புருஷேஷு யா யாச்ஞா ।**
**ராமாத³பி க: ஶூர: ஸ்மர சர நிஹதோ ந யஶ்சலதி ॥ 32 ॥**

**लघुताया मूलं किं** = சிறுமைத் தனத்திற்கு காரணம் எது?

**லகு⁴தாயா மூலம் கிம்**

**प्राकृतपुरुषेषु या याच्ञा** = பாமர ஜனங்களிடம் யாசிப்பது

**ப்ராக்ருத புருஷேஷு யா யாச்ஞா**

**रामादपि शूरः कः** = ராமனைக்காட்டிலும் சூரன் யார்?

**ராமாத³பி ஶூரః கః**

**यः स्मरारनिहतो न यश्चलति** = எவன் காம பாணத்தால் அடிபட்டு

**யஃ ஸ்மராரனிஹதோ ந யஶ்சலதி** சலிக்கிறதில்லையோ.

பாமரர்களிடம் சிறுமைக்கு யாசிப்பது மூலகாரணம். காமனின் அம்பால் அடிபட்டு மனம் சலிக்காதவன் ராமனைக் காட்டிலும் சூரன். **(32)**

**किमहर्निशमनुचिन्त्यं भगवच्चरणं न संसारः ।**
**चक्षुष्मन्तोऽप्यन्धाः के स्युर्ये नास्तिका मनुजाः ॥ ३३ ॥**

**கிமஹர்நிஶமனுசிந்த்யம் ப⁴க³வச்சரணம் ந ஸம்ஸாரஃ ।**
**சக்ஷுஷ்மந்தோ(அ)ப்யந்தா⁴ஃ கே ஸ்யுர் யே நாஸ்திகா மனுஜாஃ ॥ 33 ॥**

**अहर्निशं किं अनुचिन्त्यं** = இரவும் பகலும் எது நினைக்கத்தக்கது?

**அஹர்நிஶம் கிம் அனுசிந்த்யம்**

**भगवच्चरणं न संसारः** = பகவானின் திருவடி; ஸம்ஸாரம் அல்ல

**ப⁴க³வச்சரணம் ந ஸம்ஸாரஃ**

**चक्षुष्मन्तोऽप्यन्धाः के स्युः** = கண்ணுடன் கூடியவர்களாயிருந்தும்

**சக்ஷுஷ்மந்தோ(அ)ப்யந்தா⁴ஃ கே ஸ்யு:** எவர்கள் குருடர்களாயிருப்பார்கள்?

**ये नास्तिका मनुजाः** = எவர்கள் நாஸ்திகர்களான மனிதர்களோ

**யே நாஸ்திகா மனுஜாஃ**

இரவும் பகலும் பகவானுடைய திருவடியை நினைக்க வேண்டும். பிரபஞ்சத்தை நினைக்கக்கூடாது. பரலோகம் இல்லை கடவுள் இல்லை என்று நாஸ்திகவாதம் பேசும் மனிதர்கள் கண் இருந்தும் குருடர்கள். **(33)**

**कः पङ्गुरिह प्रथितो व्रजति च यो वार्द्धके तीर्थम् ।**
**किं तीर्थमपि च मुख्यं चित्तमलं यन्निवर्तयति ॥ ३४ ॥**

**கஃ பங்கு³ரிஹ ப்ரதி²தோ வ்ரஜதி ச யோ வார்த்³த⁴கே தீர்த²ம் ।**
**கிம் தீர்த²மபி ச முக்²யம் சித்தமலம் யத் நிவர்தயதி ॥ 34 ॥**

**इह प्रथितः पंगुः कः** = இங்கு ப்ரசித்தமான நொண்டி யார்?

**இஹ ப்ரதி²தஃ பங்கு³ஃ கஃ**

**यः च वार्द्धके तीर्थं व्रजति** = எவன் கிழத்தனத்தில் புண்ய தீர்த்தம்

**யஃ ச வார்த்³த⁴கே தீர்த²ம் வ்ரஜதி** செல்கிறானோ

| | | |
|---|---|---|
| **मुख्यमपि च तीर्थं किं**<br>**முக்²யமபி ச தீர்த²ம் கிம்** | = | முக்யமான தீர்த்தம் எது? |
| **यत् चित्तमलं निवर्तयति**<br>**யத் சித்தமலம் நிவர்தயதி** | = | எது மனதின் அழுக்கைப் போக்குகிறதோ. |

வயதானபிறகு சரீரம் தளர்ந்து பலம் குன்றி கஷ்டப்படும் கிழப்பருவத்தில் தீர்த்த யாத்திரை செல்பவன் கால் இருந்தும் நொண்டி. மனதின் அழுக்குகளை (காமம், கோபம் முதலானதை) எது போக்குகிறதோ அதுதான் முக்யமான புண்ய தீர்த்தம்.

**किं स्मर्त्तव्यं पुरुषैः हरिनाम सदा न यावनी भाषा ।**
**को हि न वाच्यः सुधिया परदोषश्चानृतं तद्वत् ॥ ३५ ॥**

**கிம் ஸ்மர்த்தவ்யம் புருஷைஃ ஹரிநாம ஸதா³ ந யாவனீ பா⁴ஷா ।**
**கோ ஹி ந வாச்யஃ ஸுதி⁴யா பரதோ³ஷஶ்சாந்ருதம் தத்³வத் ॥ 35 ॥**

| | | |
|---|---|---|
| **पुरुषैः किं स्मर्त्तव्यं**<br>**புருஷைஃ கிம் ஸ்மர்த்தவ்யம்** | = | மனிதர்களால் எது நினைக்கத்தக்கது? |
| **सदा हरिनाम**<br>**ஸதா³ ஹரிநாம** | = | எப்பொழுதும் பகவந்நாம் |
| **न यावनी भाषा**<br>**ந யாவனீ பா⁴ஷா** | = | யவந பாஷை அல்ல. |
| **सुधिया को हि न वाच्यः**<br>**ஸுதி⁴யா கோ ஹி ந வாச்யஃ** | = | நல்ல புத்தியுள்ளவனால் எது<br>சொல்லத்தக்கது அல்ல? |
| **परदोषः तद्वत् अनृतं च**<br>**பரதோ³ஷஃ தத்³வத் அந்ருதம் ச** | = | பிறரின் குற்றமும் அதுபோல் பொய்யும். |

எப்பொழுகம் பகவந்நாமாவை ஸ்மரிக்க வேண்டுமே தவிற யவன பாஷையை ஸ்மரிக்கக் கூடாது. நல்ல புத்தியுள்ளவன் பிறர் குற்றங்களையும் பொய்யையும் சொல்லக்கூடாது. **(35)**

**किं संपाद्यं मनुजैर्विद्या वित्तं बलं यशः पुण्यम् ।**
**कः सर्वगुणविनाशी लोभः शत्रुश्च कः कामः ॥ ३६ ॥**

**கிம் ஸம்பாத்³யம் மனுஜைர் வித்³யா வித்தம் ப³லம் யஶஃ புண்யம் ।**
**கஃ ஸர்வகு³ண விநாஶீ லோப⁴ஃ ஶத்ருஶ்ச கஃ காமஃ ॥ 36 ॥**

| | | |
|---|---|---|
| **मनुजैः किं संपाद्यं**<br>**மனுஜைஃ கிம் ஸம்பாத்³யம்** | = | மனிதர்களால் எது ஸம்பாதிக்கத்தக்கது? |

**विद्या वित्तं बलं यशः पुण्य** = கல்வி, பொருள், பலம், புகழ், புண்யம் (இவை).

**வித்³யா வித்தம் ப³லம் யஶ꞉ புண்ய**

**सर्वगुणविनाशी कः** = எல்லா குணங்களையும் போக்கி விடுவது எது?

**ஸர்வகு³ண விநாஶீ க꞉**

**लोभः** = பேராசை

**லோப⁴꞉**

**शत्रुश्च कः** = எதிரி யார்?

**ஶத்ருஶ்ச க꞉**

**कामः** = காமம்.

**காம꞉**

கல்வி, பணம், பலம், புகழ், புண்யம் இவைகளை மனிதர்கள் ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். பேராசை எல்லா நற்குணங்களையும் போக்கிவிடும். காமம்தான் முக்கிய எதிரி. **(36)**

## का च सभा परिहार्या हीना या वृद्धसचिवेन ।
## इह कुत्रावहितः स्यात्मनुजः किल राजसेवायाम् ॥ ३७ ॥

**கா ச ஸபா⁴ பரிஹார்யா ஹீனா யா வ்ருத்³த⁴ ஸசிவேன ।**
**இஹ குத்ராவஹித꞉ ஸ்யாத் மனுஜ꞉ கில ராஜஸேவாயாம் ॥ 37 ॥**

**का च सभा परिहार्या** = எந்த ஸபை விலக்கத்தக்கது?

**கா ச ஸபா⁴ பரிஹார்யா**

**या वृद्धसचिवेन हीना** = வயதான மந்திரி இல்லாதது

**யா வ்ருத்³த⁴ ஸசிவேன ஹீனா**

**इह मनुजः कुत अवहितः स्यात्** = இங்கு மனிதன் எதில் கவனமாக

**இஹ மனுஜ꞉ குத அவஹித꞉ ஸ்யாத்** இருக்கவேண்டும்?

**राजसेवायाम् किल** = அரசனுக்கு ஸேவை செய்வதில்.

**ராஜஸேவாயாம் கில**

விருத்தஞன அநுபவ அறிவுள்ள மந்திரி இல்லாத ராஜ ஸபைக்குச் செல்லக் கூடாது ராஜஸேவையில் ஈடுபட்டவன் மிகவும் கவனமாகவும் ஜாக்ரதையாகவும் இருக்கவேண்டும். சிறிது கவனக் குறைவாக இருந்தாலும் ராஜகோபத்தால் பெரிய அநர்த்தம் ஏற்படும். **(37)**

## प्राणादपि को रम्यः कुलधर्मः साधुसङ्गश्च ।
## का संरक्ष्या कीर्तिः पतिव्रता नैजबुद्धिश्च ॥ ३८ ॥

**ப்ராணாத³பி கோ ரம்ய꞉ குலத⁴ர்ம꞉ ஸாது⁴ ஸங்க³ஶ்ச ।**
**கா ஸம்ரக்ஷ்யா கீர்தி꞉ பதிவ்ரதா நைஜபு³த்³தி⁴ஶ்ச ॥ 38 ॥**

**कः प्राणादपि रम्यः** = எது பிராணனைக்காட்டிலும் சிறப்பானது?

**க: ப்ராணாத³பி ரம்ய:**

**कुलधर्मः साधुसङ्गश्च** = குல தர்மமும் ஸாதுக்களோடு சேர்க்கையும்

**குலத⁴ர்ம: ஸாது⁴ ஸங்க³ஶ்ச**

**का संरक्ष्या** = எது காப்பாற்றத்தக்கது?

**கா ஸம்ரக்ஷ்யா**

**कीर्तिः पतिव्रता नैजबुद्धिश्च** = புகழும், பதிவ்ரதையும், தன் புத்தியும்.

**கீர்தி: பதிவ்ரதா நைஜபு³த்³தி⁴ஶ்ச**

தன் வம்சபரம்பரையாக பெரியோர்கள் அனுஷ்டித்துவரும் தர்மமும் ஸாதுக்களின் சேர்க்கையும் பிராணனைக்காட்டிலும் மிகவும் சிறப்பானவை. இவைகளை ஒருபொழுதும் கைவிடக் கூடாது. புகழையும், பதிவ்ரதா ஸ்திரீயையும் தன் சொந்த புத்தியையும் எப்பொழுதும் காப்பாற்ற வேண்டும். **(38)**

## का कल्पलता लोके सच्छिष्यायार्पिता विद्या ।
## कोऽक्षयवटवृक्षः स्याद्विधिवत्सत्पात्रदत्तदानं यत् ॥ ३९ ॥

**கா கல்பலதா லோகே ஸச்சி²ஷ்யாயார்பிதா வித்³யா ।**
**கோ(அ)க்ஷயவடவ்ருக்ஷ: ஸ்யாத்³ விதி⁴வத் ஸத்பாத்ர த³த்த தா³னம் யத் ॥ 39 ॥**

**लोके कल्पलता का** = இவ்வுலகில் இஷ்டத்தைக் கொடுக்கும்

**லோகே கல்பலதா கா** கல்பகக்கொடி எது?

**सच्छिष्याय अर्पिता विद्या** = நல்ல சிஷ்யனுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட

**ஸச்சி²ஷ்யாய அர்பிதா வித்³யா** கல்வி

**कः अक्षयवटवृक्षः स्यात्** = எது அழியாத ஆலமரம்?

**க: அக்ஷயவடவ்ருக்ஷ: ஸ்யாத்**

**यत् विधिवत् सत्पात्रदत्तदानं** = சாஸ்திர விதிப்படி நல்ல பாத்திரத்தில்

**யத் விதி⁴வத் ஸத்பாத்ரத³த்ததா³னம்** கொடுக்கப்பட்ட தானம் எதுவோ (அது).

நல்ல சிஷ்யனுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட கல்வி தேவலோகத்துக் கல்பகக் கொடிபோல் நல்ல பலனைக் கொடுக்கும். சாஸ்திர முறைப்படி நற்குணங்கள் நிறைந்த, தகுதிபெற்றவர்களுக்குக் கொடுக்கும் தானம் அக்ஷயவட விருக்ஷம் (ஆலமரம்) போல் அழியாத பலனைக்கொடுக்கும். **(39)**

## किं शस्त्रं सर्वेषां युक्तिः माता च का धेनुः ।
## किं नु बलं यद्धैर्यं को मृत्युर्यदवधानरहितत्वम् ॥ ४० ॥

**கிம் ஶஸ்த்ரம் ஸர்வேஷாம் யுக்தி: மாதா ச கா தே⁴னு: ।**
**கிம் நு ப³லம் யத்³ தை⁴ர்யம் கோ ம்ருத்யுர் யத³வதா⁴ன ரஹிதத்வம் ॥ 40 ॥**

**सर्वेषां किं शस्त्रं** = எல்லோருக்கும் எது சஸ்திரம்?

**ஸர்வேஷாம் கிம் ஶஸ்த்ரம்**

**युक्तिः** = யுக்தி

**யுக்திः**

**माता च का** = தாயார் யார்?

**மாதா ச கா**

**धेनुः** = பசு

**தே4னுः**

**किं नु बलं** = எது பலம்?

**கிம் நு ப3லம்**

**यत् धैर्यं** = எது தைர்யமோ (அது)

**யத் தை4ர்யம்**

**को मृत्युः** = யார் மருத்யு?

**கோ ம்ருத்யு:**

**यत् अवधानरहितत्वं** = கவனமில்லாமலிருப்பது

**யத் அவதா4னரஹிதத்வம்**

யுக்திதான் எல்லோருக்கும் ஆயுதம். தக்க யுக்திகளைக் கூறி வாதத்தில் யாரையும் வென்றுவிடலாம். தாய்மாதிரி பசு நமக்குப் பாலைக் கொடுத்து போஷிக் கிறது. மனோதைர்யம் தான் நமக்கு சொந்த பலம். கவனக் குறைவாயிருப்பது யமன் இதனால் அழிவு ஏற்படும். **(40)**

**कुत्र विषं दुष्टजने किमिहाशौचं भवेतृणं नृणाम् ।**
**किमभयमिह वैराम्यं भयमपि किं वित्तमेव सर्वेषाम् ॥ ४१ ॥**

**குத்ர விஷம் து3ஷ்டஜனே கிமிஹாஶௌசம் ப4வேத் ருணம் ந்ருணாம் ।**
**கிமப4யமிஹ வைராம்யம் ப4யமபி கிம் வித்தமேவ ஸர்வேஷாம் ॥ 41 ॥**

**कुत्र विषं** = எங்கு விஷம் உள்ளது?

**குத்ர விஷம்**

**दुष्टजने** = துஷ்ட மனிதரிடம்

**து3ஷ்டஜனே**

**इह नृणां किं आशौचं भवेत्** = இங்குமனிதர்களுக்கு எது தீட்டு ஆகும்?

**இஹ ந்ருணாம் கிம் ஆஶௌசம் ப4வேத்**

**ऋणं** = கடன்

**ருணம்**

**इह अभयं किं** = இங்கு பயமில்லாதது எது?

**இஹ அப4யம் கிம்**

| | | |
|---|---|---|
| **वैराम्यं**<br>**வைராம்யம்** | = | பற்றின்மை |
| **सर्वेषाम् भयमपि किं**<br>**ஸர்வேஷாம் ப⁴யமபி கிம்** | = | எல்லோருக்கும் பயம் எது? |
| **वित्तमेव**<br>**வித்தமேவ** | = | பணம்தான் |

துஷ்ட ஜனங்களிடம் விஷம் உள்ளது. மனிதர்களுக்கு கடன் பெரிய தீட்டு. வைராக்யமுள்ளவனுக்கு யாரிடமும் பயம் இருக்காது. பணமுள்ளவன் எப்பொழுதும் பயந்துகொண்டே இருக்கவேண்டும். **(41)**

**का दुर्लभा नराणां हरिभक्तिः पातकं च किं हिंसा ।**
**को हि भगवत्प्रियः स्याद्योऽन्यं नोद्वेजयेदनुद्विग्नः ॥ ४२ ॥**

**கா து³ர்லபா⁴ நராணும் ஹரிப⁴க்தி:**
**பாதகம் ச கிம் ஹிம்ஸா ।**
**கோ ஹி ப⁴க³வத் ப்ரிய: ஸ்யாத்³**
**யோ(அ)ன்யம் நோத்³வேஜயேத³னுத்³விக்³ன: ॥ 42 ॥**

| | | |
|---|---|---|
| **नराणां दुर्लभा का**<br>**நராணும் து³ர்லபா⁴ கா** | = | மனிதர்களுக்கு அடையமுடியாதது எது? |
| **हरिभक्तिः**<br>**ஹரிப⁴க்தி:** | = | ஹரிபக்தி |
| **पातकं च किं**<br>**பாதகம் ச கிம்** | = | பாதகம் எது? |
| **हिंसा**<br>**ஹிம்ஸா** | = | ஹிம்ஸை |
| **को हि भगवत्प्रियः स्यात्**<br>**கோ ஹி ப⁴க³வத்ப்ரிய: ஸ்யாத்** | = | எவன் பகவானுக்கு பிரியமானவனுக இருப்பான்? |
| **यः अनुद्विग्नः अन्यं नोद्वेजयेत्**<br>**ய: அனுத்³விக்³ன: அன்யம் நோத்³வேஜயேத்** | = | எவன்தான் பயமடையாமல் பிறரை பயமடையும்படி செய்யவில்லையோ (அவன்). |

ஹரிபக்தி எல்லோருக்கும் ஸுலபமாக ஏற்படாது. பிறருக்கு ஹிம்ஸை செய்வது பாதகம். எவன் பிறரிடமிருந்து தான் பயப்படாமல் பிறருக்கு பயத்தை உண்டுபண்ணுமலுமிருக்கிறனே அவன் பகவானுக்கு பிரியமானவன். **(42)**

**कस्मात्सिद्धिस्तपसो बुद्धिः क्व नु भूसुरे कुतो बुद्धिः ।**
**वृद्धोपसेवया के वृद्धा ये धर्मतत्वज्ञाः ॥ ४३ ॥**

**கஸ்மாத் ஸித்³தி⁴ஸ் தபஸோ பு³த்³தி⁴: க்வ நு பூ⁴ஸுரே குதோ பு³த்³தி⁴: ।**
**வ்ருத்³தோ⁴பஸேவயா கே வ்ருத்³தா⁴ யே த⁴ர்ம தத்வஜ்ஞா: ॥ 43 ॥**

**कस्मात् सिद्धिः** = எதிலிருந்து ஸித்தி ஏற்படும்?
**கஸ்மாத் ஸித்³தி⁴:**
**तपसः** = தவத்திலிருந்து
**தபஸ:**
**बुद्धिः क्व नु** = அறிவு எங்கே இருக்கிறது?
**பு³த்³தி⁴: க்வ நு**
**भूसुरे** = அந்தணரிடத்தில்
**பூ⁴ஸுரே**
**कुतः बुद्धिः** = எதனுல் புத்தி ஏற்படுகிறது?
**குத: பு³த்³தி⁴:**
**वृद्धोपसेवया** = பெரியோர்களை ஸேவிப்பதால்
**வ்ருத்³தோ⁴பஸேவயா**
**के वृद्धाः** = பெரியோர்கள் யார்?
**கே வ்ருத்³தா⁴:**
**ये धर्मतत्वज्ञाः** = எவர்கள் தர்மத்தின் ஸ்வரூபத்தை
**யே த⁴ர்ம தத்வஜ்ஞா:** அறிந்தவர்களோ (அவர்கள்).

தவத்தால் ஸித்திகள் கிடைக்கும். அந்தணனிடம் புத்தித்திறமை இருக்கும். பெரியோர்களை ஸேவிப்பதால் புத்தி ஏற்படுகிறது. தர்மத்தின் ஸூக்ஷ்மத்தை அறிந்தவர்கள் பெரியோர்கள். **(43)**

**सम्भावितस्य मरणादधिकं किं दुर्यशो भवति ।**
**लोके सुखी भवेत्को धनवान्धनमपि च किं यतश्श्रेष्टम् ॥ ४४ ॥**

**ஸம்பா⁴விதஸ்ய மரணாத்³ அதி⁴கம் கிம் து³ர்யஶோ ப⁴வதி ।**
**லோகே ஸுகீ² ப⁴வேத்கோ த⁴னவாந் த⁴னமபி ச கிம் யதஶ்சேஷ்டம் ॥ 44 ॥**

**सम्भावितस्य मरणादधिकं** = கொண்டாடப்பட்டவனுக்கு மரணத்தைக்காட்டிலும்
**ஸம்பா⁴விதஸ்ய மரணாத்³ அதி⁴கம்** அதிகமாக
**किं भवति** = எது ஆகிறது?
**கிம் ப⁴வதி**
**दुर्यशः** = அபகீர்த்தி
**து³ர்யஶ:**
**लोके कः सुखी भवेत्** = உலகில் எவன் ஸுகமுள்ளவனுக இருக்கிறன்?
**லோகே க: ஸுகீ² ப⁴வேத்**

**धनवान्** = பணமுள்ளவன்

**த$^4$னவான்**

**धनमपि च किं** = எது பணம்?

**த$^4$னமபி ச கிம்**

**यतश्च इष्टं** = எதனால் இஷ்டம் நிறைவேறுகிறதோ அது

**யதஶ்ச இஷ்டம்**

உலகத்தோரால் கொண்டாடப்பட்டவனுக்கு அபகீர்த்தி மரணத்தைக் காட்டிலும் அதிகமான துன்பத்தைக் கொடுக்கும். உலகில் பணமுள்ளவன் ஸுகமாக வாழ்வான். எதனால் தன் விருப்பம் நிறைவேறுகிறதோ அது அவனுக்கு தனம். **(44)**

## सर्वसुखानां बीजं किं पुण्यं दुःखमपि कुतः पापात् ।
## कस्यैश्वर्यं यः किल शङ्करमाराधयेद्भक्त्या ॥ ४५ ॥

**ஸர்வ ஸுகா$^2$னாம் பீ$^3$ஜம் கிம் புண்யம் து$^3$:க$^2$மபி குத: பாபாத் ।**
**கஸ்யைஶ்வர்யம் ய: கில ஶங்கரமாராத$^4$யேத்$^3$ ப$^4$க்த்யா ॥ 45 ॥**

**सर्वसुखानां किं बीजं** = எல்லா ஸுகங்களுக்கும் எது காரணம்?

**ஸர்வஸுகா$^2$னாம் கிம் பீ$^3$ஜம்**

**पुण्यं** = புண்யம்

**புண்யம்**

**दुःखमपि कुतः** = எதிலிருந்து துக்கம் ஏற்படுகிறது?

**து$^3$:க$^2$மபி குத:**

**पापात्** = பாபத்திலிருந்து

**பாபாத்**

**कस्य ऐश्वर्यं** = எவனுக்கு ஐசுவர்யம் ஏற்படுகிறது?

**கஸ்ய ஐஶ்வர்யம்**

**यः किल भक्त्या शंकरं आराधयेत्** = எவன் பக்தியுடன் சங்கரனை

**ய: கில ப$^4$க்த்யா ஶங்கரம் ஆராத$^4$யேத்** பூஜிப்பானோ (அவன்)

எல்லா ஸுகங்களுக்கும் புண்யம் மூலகாரணம். பாபத்தால் துன்பம் ஏற்படும். பக்தியோடு சங்கரனை ஆராதிப்பவனுக்கு ஐசுவர்யம் கிடைக்கும். **(45)**

## को वर्धते विनीतः को वा हीयेत यो दृप्तः ।
## को न प्रत्येतव्यो ब्रूते यश्चानृतं शश्वत् ॥ ४६ ॥

**கோ வர்த$^4$தே வினீத: கோ வா ஹீயேத யோ த்$^3$ருப்த: ।**
**கோ ந ப்ரத்யேதவ்யோ ப்$^3$ரூதே யஶ்சாந்ருதம் ஶஶ்வத் ॥ 46 ॥**

**को वर्धते** = எவன் உயர்நிலையடைகிறன்?

**கோ வர்த⁴தே**

**विनीतः** = வணக்கமுள்ளவன்

**வினீத꞉**

**को वा हीयेत** = எவன் தாழ்வு அடைவான்?

**கோ வா ஹீயேத**

**य दृप्तः** = எவன் கர்வமுள்ளவனோ

**ய த்³ருப்த꞉**

**को न प्रत्येतव्यः** = எவன் நம்பத்தகுந்தவனல்ல?

**கோ ந ப்ரத்யேதவ்ய꞉**

**यश्चा शश्वत् अनृतं ब्रूते** = எவன் அடிக்கடி பொய் சொல்கிறனோ

**யஶ்சா ஶஶ்வத் அந்ருதம் ப்³ரூதே**

வணக்கமுள்ளவன் உயர்நிலையை அடைவான். கர்வம் உள்ளவன் தாழ்ந்த நிலையையடைவான். எப்பொழுதும் பொய் பேசுபவனை நம்பக்கூடாது. **(46)**

**कुत्रानृतेऽप्यपापं यच्चोक्तं धर्मरक्षार्थम् ।**
**को धर्मोऽभिमतो यः शिष्टानां निजकुलीनानाम् ॥ ४७ ॥**

**குத்ராந்ருதே(அ)ப்யபாபம் யச்சோக்தம் த⁴ர்ம ரக்ஷார்த²ம் ।**
**கோ த⁴ர்மோ(அ)பி⁴மதோ ய꞉ ஶிஷ்டானும் நிஜ குலீனுனும் ॥ 47 ॥**

**कुत्र अनृतेपि अपापं** = எந்தக் காரியத்தில் பொய் சொன்னுலும்

**குத்ர அந்ருதேபி அபாபம்** பாபமில்லை?

**धर्मरक्षार्थ यच्च उक्तं** = தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக

**த⁴ர்மரக்ஷார்த² யச்ச உக்தம்** எது சொல்லப்பட்டதோ

**को धर्मः** = எது தர்மம்?

**கோ த⁴ர்ம꞉**

**निजकुलीनानाम् शिष्टानां** = தன் வம்சத்தைச் சேர்ந்த சிஷ்டர்களுக்கு.

**நிஜகுலீ*னானா*ம் ஶிஷ்டானும்**

தர்மத்தைக் காப்பாற்றுவதற்காகச் சொல்லும் பொய் பாபமாகாது. தன் வம்சத்தைச் சேர்ந்த சிஷ்டர்களுக்கு ஸம்மதமானது. தர்மமாகும். **(47)**

**साधुबलं किं दैवं कः साधुः सर्वदा तुष्टः ।**
**दैवं किं यत्सुकृतं कः सुकृती श्लाध्यते च यः सद्भिः ॥ ४८ ॥**

**ஸாது⁴ ப³லம் கிம் தை³வம் க꞉ ஸாது⁴꞉ ஸர்வதா³ துஷ்ட꞉ ।**
**தை³வம் கிம் யத்ஸுக்ருதம் க꞉ ஸுக்ருதீ ஶ்லாத்⁴யதே ச ய꞉ ஸத்³பி⁴꞉ ॥ 48 ॥**

**किं साधुबलं** = எது ஸாதுக்களுக்கு பலம்?

**கிம் ஸாது⁴ப³லம்**

**दैवं** = தைவம்

**தை³வம்**

**कः साधुः** = ஸாது யார்?

**க: ஸாது⁴:**

**सर्वदा तुष्टः** = எப்பொழுதும் ஸந்தோஷப்படுகிறவன்

**ஸர்வதா³ துஷ்ட:**

**किं दैवं** = எது தைவம்?

**கிம் தை³வம்**

**यत् सुकृतं** = எது புண்யமோ (அது)

**யத் ஸுக்ருதம்**

**कः सुकृती** = எவன் புண்யசாலி?

**க: ஸுக்ருதீ**

**यश्च सद्भिः श्लाध्यते** = எவன் ஸாதுக்களால் கொண்டாடப்படுகிறானோ

**யஶ்ச ஸத்³பி⁴: ஶ்லாத்⁴யதே**

ஸாதுக்களுக்கு தைவம்தான் பலம். எப்பொழுதும் ஸந்தோஷமாக இருப்பவன் ஸாது. புண்யம்தான் தைவம் என்பது. ஸாதுக்களால் கொண்டாடப்படுகிறவன் புண்யசாலி. **(48)**

**गृहमेधिनश्च मित्रं किं भार्या को गृही च यो यजते ।**
**को यज्ञो यः श्रुत्या विहितः श्रेयस्करो नृणाम् ॥ ४९ ॥**

**க்³ருஹமேதி⁴னஶ்ச மித்ரம் கிம் பா⁴ர்யா கோ க்³ருஹீ ச யோ யஜதே ।**
**கோ யஜ்ஞோ ய: ஶ்ருத்யா விஹித: ஶ்ரேயஸ்கரோ ந்ருணாம் ॥ 49 ॥**

**गृहमेधिनश्च किं मित्रं** = கிருஹஸ்தனுக்கு நண்பன் யார்?

**க்³ருஹமேதி⁴னஶ்ச கிம் மித்ரம்**

**भार्या** = மனைவி

**பா⁴ர்யா**

**कश्च गृही** = யார் கிருஹஸ்தன்?

**கஶ்ச க்³ருஹீ**

**यो यजते** = எவன் யாகம் செய்கிறானோ (அவன்)

**யோ யஜதே**

**क यज्ञः** = எது யஜ்ஞம்?

**க யஜ்ஞ:**

| | | |
|---|---|---|
| **यः श्रुत्या विहितः नृणाम् श्रेयस्करः** | = | எது மனிதர்களுக்கு சிரேயஸ்ஸைக் |
| **யः ஶ்ருத்யா விஹிதः ந்ருணாம் ஶ்ரேயஸ்கரः** | | கொடுக்கிறதாக வேதத்தால் விதிக்கப்பட்டதோ |

கிருஹஸ்தனுக்கு நட்புக்கு உரியவள் மனைவி. யாகம் செய்கிறன் கிருஹஸ்தன். மனிதர்களுக்கு சிரேயஸ்ஸைத் தருவதாக வேதத்தில் விதிக்கப்பட்டது (செய்யும்படி உபதேசிக்கப்பட்டது) யஜ்ஞும் வேததத்தில் சொல்லியிருந்தாலும் ஆபிசாரகர்மா சிரேயஸ்கரமில்லாததால் யஜ்ஞுமாகாது. நன்மையைத் தருவதாயிருந்தாலும் வேதத்தில் விஹிதமல்லாததும் யஜ்ஞுமாகாது) **(49)**

## कस्य क्रिया हि सफला यः पुनराचारवां शिष्टः ।
## कः शिष्टो यो वेदप्रमाणवां को हतः क्रियाभ्रष्टः ॥ ५० ॥

**கஸ்ய க்ரியா ஹி ஸப²லா யः புனராசாரவாம் ஶிஷ்டः ।**
**கः ஶிஷ்டோ யோ வேத³ப்ரமாணவாம் கோ ஹதः க்ரியாப்⁴ரஷ்டः ॥ 50 ॥**

| | | |
|---|---|---|
| **कस्य क्रिया हि सफला**<br>**கஸ்ய க்ரியா ஹி ஸப²லா** | = | எவனுடைய காரியம் பலனுள்ளது |
| **यः पुनराचारवां शिष्टः**<br>**யः புனராசாரவாம் ஶிஷ்டः** | = | எவர் ஆசாரத்துடன் கூடிய சிஷ்டராயிருக்கிறாரோ |
| **कः शिष्टः**<br>**கः ஶிஷ்டः** | = | சிஷ்டர் யார்? |
| **यो वेदप्रमाणवां**<br>**யோ வேத³ப்ரமாணவாம்** | = | எவன் வேதத்தை பிரமாணமாகக் கொண்டிருக்கிறுரோ |
| **को हतः**<br>**கோ ஹதः** | = | எவன் கெட்டுப்போனவன்? |
| **क्रियाभ्रष्टः**<br>**க்ரியாப்⁴ரஷ்டः** | = | தர்மகாரியத்திலிருந்து நழுவினவன் |

நல்ல ஆசாரங்களை அனுஷ்டிக்கும் சிஷ்டர் செய்யும் காரியம் பலனைத் தரும். வேதத்தை பிரமாணமாக நம்புகிறவர் சிஷ்டர். ஸ்வதர்மத்திலிருந்து நழுவினவன் கெட்டுப்போனவன். நிலையை இவன் அடையமுடியாது. **(50)**

## को धन्यः संन्यासी को मान्यः पण्डितः साधुः ।
## कः सेव्यो यो दाता को दाता योऽर्थितृ सिमातनुते ॥ ५१ ॥

**கோ த⁴ன்யः ஸம்ந்யாஸீ கோ மான்யः பண்டி³தः ஸாது⁴ः ।**
**கः ஸேவ்யோ யோ தா³தா கோ தா³தா யோ(அ)ர்தி²த்ரு ஸிமாதனுதே ॥ 51 ॥**

**को धन्यः** = எவன் பாக்யசாலி?

**கோ த4ன்ய:**

**संन्यासी** = ஸந்யாஸி

**ஸம்ந்யாஸீ**

**को मान्यः** = எவன் ஸத்கரிக்கத் தகுந்தவன்?

**கோ மான்ய:**

**साधुः पण्डितः** = ஸாதுவான பண்டிதன்

**ஸாது4: பண்டி3த:**

**कः सेव्यः** = எவன் ஸேவிக்கத்தக்கவன்?

**க: ஸேவ்ய:**

**यो दाता** = எவன் கொடுக்கிறானோ (அவன்)

**யோ தா3தா**

**को दाता** = எவன் கொடுக்கிறவன்?

**கோ தா3தா**

**यःअर्थितृ सिमातनुते** = எவன் யாசகனுக்கு திருப்தியை

**ய:அர்தி2த்ரு ஸிமாதனுதே** உண்டுபண்ணுகிறானோ.

ஸந்யாஸி பாக்யசாலி. ஸாதுவான வித்வான் கௌரவிக்கத்தக்கவன். கொடுக்கிறவனை ஸேவிக்கவேண்டும். யாசகர்களின் மனதில் திருப்தி உண்டுபண்ணுகிறவன் கொடையாளி. **(51)**

## किं भाग्यं देहवतामारोग्यं कः फली कृषिकृत् ।
## कस्य न पापं जपतः कः पूर्णो यः प्रजावान्स्यात् ॥ ५२ ॥

**கிம் பா4க்3யம் தே3ஹவதாம் ஆரோக்3யம் க: ப2லீ க்ருஷிக்ருத் ।**
**கஸ்ய ந பாபம் ஜபத: க: பூர்ணோ ய: ப்ரஜாவான் ஸ்யாத் ॥ 52 ॥**

**देहवतां किं भाग्यं** = சரீரமுள்ளவர்களுக்கு எது பாக்யம்?

**தே3ஹவதாம் கிம் பா4க்3யம்**

**आरोग्यं** = பிணியில்லாமை

**ஆரோக்3யம்**

**कः फली** = எவன் பலனையடைபவன்?

**க: ப2லீ**

**कृषिकृत्** = பயிர்த்தொழில் செய்கிறவன்.

**க்ருஷிக்ருத்**

**कस्य पापं न** = எவனுக்குப் பாபம் இல்லை?

**கஸ்ய பாபம் ந**

**जपतः** = ஜபம் செய்கிறவனுக்கு

**ஜபத:**

**कः पूर्णो:** = எவன் நிறைவு பெற்றவன்?

**க: பூர்ணோ**

**यः प्रजावान् स्यात्** = எவன் புத்திரனோடு கூடியவனோ

**ய: ப்ரஜாவான் ஸ்யாத்**

பிணியில்லாமலிருப்பது தேஹமுள்ளவர்களுக்கு பாக்யமாகும். பயிர்த் தொழில் செய்கிறவன் பலனைப்பெறுவான். மந்திரத்தை ஜபிக்கிறவனிடம் பாபம் இருக்காது. குழந்தை யுள்ளவன் நிறைவுபெற்றவன். **(52)**

## किं दुष्करं नराणां यन्मनसो निग्रहः सततम् ।
## को ब्रह्मचर्यवां स्यात्यश्चास्खलितोर्ध्वरेतस्कः ॥ ५३ ॥

**கிம் து³ஷ்கரம் நராணாம் யன்மனஸோ நிக்³ரஹ: ஸததம் ।**
**கோ ப்³ரஹ்மசர்யவாம் ஸ்யாத் யஶ்சாஸ்க²லிதோர்த்⁴வரேதஸ்க: ॥ 53 ॥**

**नराणां किं दुष्करं** = மனிதர்களுக்கு செய்யமுடியாதது எது

**நராணாம் கிம் து³ஷ்கரம்**

**यत् सततम् मनसो निग्रहः** = எப்பொழுதும் மனஸை யடக்குவது

**யத் ஸததம் மனஸோ நிக்³ரஹ:**

**कः ब्रह्मचर्यवान् स्यात्** = எவன் ப்ரஹ்மசர்யத்தோடு கூடியவனாக இருப்பான்?

**க: ப்³ரஹ்மசர்யவான் ஸ்யாத்**

**यश्च अस्खलितोर्ध्वरेतस्कः** = எவன் கீழே நழுவாத, மேல் நோக்கிய சுக்லமுள்ளவனோ

**யஶ்ச அஸ்க²லிதோர்த்⁴வரேதஸ்க:**

எப்பொழுதும் மனதையடக்குவது மனிதர்களுக்குச் செய்ய முடியாத காரியமாகும். சுக்லத்தை நழுவவிடாமல் நிறுத்தி வைத்திருப்பவன் ப்ரஹ்மசர்யமுள்ளவன். **(53)**

## का च परदेवतोक्ता चिच्छक्ति को जगद्भर्ता ।
## सूर्यः सर्वेषां को जीवनहेतुः स पर्जन्यः ॥ ५४ ॥

**கா ச பரதே³வதோக்தா சிச்ச²க்தி கோ ஜக³த்³ப⁴ர்தா ।**
**ஸூர்ய: ஸர்வேஷாம் கோ ஜீவன ஹேது: ஸ பர்ஜன்ய: ॥ 54 ॥**

**का च परदेवता उक्ता** = எவள் பரதேவதையாகச் சொல்லப்பட்டிருக்கிறாள்?

**கா ச பரதே³வதா உக்தா**

**चिच्छक्तिः** = சித்ரூபிணியான பராசக்தி

**சிச்ச²க்தி:**

| | | |
|---|---|---|
| **को जगद्भर्ता**<br>**கோ ஜக³த்³ப⁴ர்தா** | = | உலகை போஷிக்கிறவன் யார்? |
| **सूर्यः**<br>**ஸூர்ய:** | = | ஸூரியன் |
| **सर्वेषां जीवनहेतुः कः**<br>**ஸர்வேஷாம் ஜீவனஹேது: க:** | = | எல்லோருக்கும் ஜீவிப்பதற்குக் காரணம் எது? |
| **स पर्जन्यः**<br>**ஸ பர்ஜன்ய:** | = | அது மேகம். |

சித்ரூபிணியரன பராசக்தி பரதேவதை. உலகைப் போஷிக்கிறவன் ஸூரியன். எல்லோரும் ஜீவிப்பதற்கு முக்ய காரணம் மேகம். **(54)**

**कः शूरो यो भीतत्राता त्राता च कः स गुरुः ।**
**को हि जगद्गुरुरुक्तः शंभुर्ज्ञानं कुतः शिवादेव ॥ ५५ ॥**

**க: ஶூரோ யோ பீ⁴தத்ராதா த்ராதா ச க: ஸ கு³ரு: ।**
**கோ ஹி ஜக³த்³கு³ருருக்த: ஶம்பு⁴ர்ஜ்ஞானம் குத: ஶிவாதே³வ ॥ 55 ॥**

| | | |
|---|---|---|
| **कः शूरः**<br>**க: ஶூர:** | = | எவன் சூரன்? |
| **यो भीतत्राता**<br>**யோ பீ⁴தத்ராதா** | = | எவன் பயந்தவர்களைக் காப்பாற்றுகிறவனோ (அவன்) |
| **त्राता च कः**<br>**த்ராதா ச க:** | = | (ஸம்ஸார பயத்திலிருந்து) காப்பாற்றுகிறவன் யார்? |
| **स गुरुः**<br>**ஸ கு³ரு:** | = | (அக்ஞானத்தைப் போக்கும்) அவர் குரு |
| **को हि जगद्गुरुः उक्तः**<br>**கோ ஹி ஜக³த்³கு³ரு: உக்த:** | = | எவர் ஜகத்குருவாகச் சொல்லப்பட்டவர்? |
| **शंभुः**<br>**ஶம்பு⁴:** | = | பரமேச்வரன் |
| **कुतः ज्ञानं**<br>**குத: ஜ்ஞானம்** | = | யாரிடமிருந்து ஞானம் கிடைக்கும்? |
| **शिवादेव**<br>**ஶிவாதே³வ** | = | பரமசிவனிடமிருந்து தான். |

பயந்தவனைக் காப்பாற்றுகிறவன் சூரன் (ஸம்ஸார பயத்திலிருந்து) காப்பாற்று கிறவர் குரு. பரமேசுவரன் எல்லா ஜகத்துக்கும் குரு. பரமசிவனிடமிருந்துதான் ஞானம் கிடைக்கும். **(55)**

**मुक्तिं लभेत कस्मात्मुकुन्दभक्तेर्मुकुन्दः कः ।**
**यस्तारयेदविद्यां का चाविद्या यदात्मनोऽस्फूर्तिः ॥ ५६ ॥**

**முக்திம் லபே⁴த கஸ்மாத் முகுந்த³ ப⁴க்தேர் முகுந்த³ঃ கঃ ।**
**யஸ்தாரயேத³வித்³யாம் கா சாவித்³யா யதா³த்மனோ(அ)ஸ்பூ²ர்திঃ ॥ 56 ॥**

**कस्मात् मुक्तिं लभेत** = எதனால் முக்தியையடைவான்?
**கஸ்மாத் முக்திம் லபே⁴த**
**मुकुन्दभक्तेः** = முகுந்த பக்தியால்
**முகுந்த³ப⁴க்தேঃ**
**कः मुकुन्दः** = முகுந்தர் யார்?
**கঃ முகுந்த³ঃ**
**यः अविद्यां तारयेत्** = எவர் அவித்யையைத் தாண்டும்படிச் செய்வாரோ
**யঃ அவித்³யாம் தாரயேத்**
**का च अविद्या** = அவித்யை எது?
**கா ச அவித்³யா**
**यत् आत्मनः अस्फूर्तिः** = ஆத்மஸ்வரூபம் தெரியாமல் இருப்பது.
**யத் ஆத்மனঃ அஸ்பூ²ர்திঃ**

முகுந்தனிடம் பக்தியுள்ளவனுக்கு மோக்ஷம் கிடைக்கும். அவித்யையைத் தாண்டும்படி செய்பவர் முகுந்தர் ஆத்ம ஸ்வரூபம் தெரியாமலிருப்பதுதான் அவித்யை (இவ்விரு சுலோகங்களிலும், குருவே ஈசுவரன், ஈசுவரனே குரு என்பதைக் காட்டுகிறார்) **(56)**

**कस्य न शोको यः स्याद्क्रोधः किं सुखं तुष्टिः ।**
**को राजा रञ्जनकृत्कश्च श्वा नीचसेवको यः स्यात् ॥ ५७ ॥**

**கஸ்ய ந ஶோகோ யঃ ஸ்யாத்³க்ரோத⁴ঃ கிம் ஸுக²ம் துஷ்டিঃ ।**
**கோ ராஜா ரஞ்சனக்ருத்கஶ்ச ஶ்வா நீசஸேவகோ யঃ ஸ்யாத் ॥ 57 ॥**

**कस्य शोको न** = எவனுக்கு சோகம் இல்லை?
**கஸ்ய ஶோகோ ந**
**यः अक्रोधः स्यात्** = எவன் கோபமில்லாதவனாக இருப்பானோ
**யঃ அக்ரோத⁴ঃ ஸ்யாத்**
**किं सुखं** = எது ஸுகம்?
**கிம் ஸுக²ம்**
**तुष्टिः** = ஸந்தோஷம்
**துஷ்டিঃ**

| | | |
|---|---|---|
| **को राजा**<br>**கோ ராஜா** | = | எவன் ராஜா? |
| **रञ्चनकृत्**<br>**ரஞ்சனக்ருத்** | = | ஸந்தோஷப்படுத்துகிறவன் |
| **कश्च श्वा**<br>**கஶ்ச ஶ்வா** | = | யார் நாய்? |
| **यः नीचसेवकः स्यात्**<br>**யஃ நீசஸேவகஃ ஸ்யாத்** | = | எவன் தாழ்ந்தவனுக்கு ஸேவகனாக இருப்பானோ |

எவனிடம் கோபமில்லையோ, அவனுக்கு சோகம் ஏற்படாது ஸந்தோஷமே ஸுகம். ஜனங்களை ஸந்தோஷப்படுத்துகிறவன் ராஜா. தாழ்ந்தவனிடம் ஸேவை புரிபவன் நாய்க்கு ஸமமானவன். **(57)**

## को मायी परमेशः क इन्द्रजालायते प्रपञ्चोऽयम् ।
## कः स्वप्ननिभो जाग्रद्व्यवहारः सत्यमपि च किं ब्रह्म ॥ ५८ ॥

**கோ மாயீ பரமேஶஃ க இந்த்³ரஜாலாயதே ப்ரபஞ்சோ(அ)யம் ।**
**கஃ ஸ்வப்னனிபோ⁴ ஜாக்³ரத்³வ்யவஹாரஃ ஸத்யமபி ச கிம் ப்³ரஹ்ம ॥ 58 ॥**

| | | |
|---|---|---|
| **को मायी**<br>**கோ மாயீ** | = | மாயையோடு கூடியவன் யார்? |
| **परमेशः**<br>**பரமேஶஃ** | = | பரமேசுவரன் |
| **कः इन्द्रजालायते**<br>**கஃ இந்த்³ரஜாலாயதே** | = | இந்திர ஜாலம்போல் பொய்யானது எது? |
| **अयं प्रपञ्चः**<br>**அயம் ப்ரபஞ்சஃ** | = | இந்த ப்ரபஞ்சம். |
| **स्वप्ननिभः कः**<br>**ஸ்வப்னனிப⁴ஃ கஃ** | = | ஸ்வப்னம்போன்றது எது? |
| **जाग्रद्व्यवहारः**<br>**ஜாக்³ரத்³வ்யவஹாரஃ** | = | விழிப்பு நிலையில் நடக்கும் வியவஹாரம் |
| **सत्यमपि च किं**<br>**ஸத்யமபி ச கிம்** | = | உண்மையானது எது? |
| **ब्रह्म**<br>**ப்³ரஹ்ம** | = | பரப்ரஹ்மம் |

பரமேசுவரர் மாயாவி இந்த பிரபஞ்சம் இந்திரஜாலம்போல் பொய்யானது விழிப்பு நிலையில் நாம் செய்யும் வியவஹாரமும் ஸ்வப்னம் போன்றதே ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள். **(58)**

## किं मिथ्या यद्विद्यानाश्यं तुच्छं तु शशविषाणादि ।
## का चानिर्वचनीया माया किं कल्पितं द्वैतम् ॥ ५९ ॥

**கிம் மித்²யா யத்³வித்³யாநாஶ்யம் துச்ச²ம் து ஶஶவிஷாணாதி³ ।**
**கா சாநிர்வசனீயா மாயா கிம் கல்பிதம் த்³வைதம் ॥ 59 ॥**

| | | |
|---|---|---|
| **किं मिथ्या**<br>**கிம் மித்²யா** | = | எது பொய்? |
| **यत् विद्यानाश्यं**<br>**யத் வித்³யாநாஶ்யம்** | = | எது அக்ஞானத்தால் நாசமடைகிறதோ (அது) |
| **शशविषाणादि तु**<br>**ஶஶவிஷாணாதி³ து** | = | முயல் கொம்பு முதலானவையோவென்றால் |
| **तुच्छं**<br>**துச்ச²ம்** | = | அஸத்து (இல்லாதது) |
| **अनिर्वचनीया च का**<br>**அநிர்வசனீயா ச கா** | = | இன்னவிதமென்று சொல்ல முடியாதது எது? |
| **माया**<br>**மாயா** | = | மாயை |
| **कल्पितं किं**<br>**கல்பிதம் கிம்** | = | கல்பிக்கப்பட்டது எது? |
| **द्वैतम्**<br>**த்³வைதம்** | = | த்வைதம் (இரண்டாகத் தோன்றுவது). |

ஞானத்தால் எது அழிந்துபோகிறதோ அது பொய் முயற் கொம்பு முதலானவை துச்சம் (அத்யந்தம் அஸத்) இன்னவிதமென்று சொல்லமுடியாதது மாயை. த்வைதம் (இரண்டாகத் தோன்றும் பிரபஞ்சம் எல்லாம் அக்ஞானத்தால்) கல்பிக்கப் பட்டது. **(59)**

## किं पारमार्थिकं स्यादद्वैतं चाज्ञता कुतोऽनादिः ।
## वपुषश्च पोषकं किं प्रारब्धं चान्नदायि किं चायुः ॥ ६० ॥

**கிம் பாரமார்தி²கம் ஸ்யாத³த்³வைதம் சாஜ்ஞதா குதோ(அ)நாதி³: ।**
**வபுஷஶ்ச போஷகம் கிம் ப்ராரப்³த⁴ம் சான்னதா³யி கிம் சாயு: ॥ 60 ॥**

| | | |
|---|---|---|
| **किं पारमार्थिकं स्यात्**<br>**கிம் பாரமார்தி²கம் ஸ்யாத்** | = | உண்மையானது எது? |

**अद्वैतं** = இரண்டற்ற (ஒன்றான) பரம்பொருள்
**அத்$^3$வைதம்**

**कुतः च अज्ञता** = எப்பொழுது அக்ஞானம் ஏற்பட்டது?
**குத: ச அஜ்ஞதா**

**अनादिः** = அநாதி (ஆதியில்லாதது)
**அநாதி$^3$:**

**वपुषश्च पोषकं किं** = சரீரத்தைப் போஷிக்கிறது எது?
**வபுஷஶ்ச போஷகம் கிம்**

**प्रारब्धं** = பிராரப்தம் (பலனைக் கொடுக்க ஆரம்பித்த பூர்வ கர்மா).
**ப்ராரப்$^3$த$^4$ம்**

**अन्नदायि च किं** = உணவைக் கொடுக்கிறது எது?
**அன்னதா$^3$யி ச கிம்**

**आयुः** = ஆயுள்
**ஆயு:**

இரண்டற்ற பரம்பொருள் ஒன்றே உண்மையானது. அக்ஞானம் அநாதிகாலமாக இருக்கிறது. சரீரத்தை வளர்ப்பது. பிராரப்தகர்மா. அன்னத்தைக் கொடுப்பது ஆயுள். **(60)**

## को ब्रह्मणैरुपास्यो गायत्र्यर्काग्निगोचरः शम्भुः ।
## गायत्र्यामादित्ये चाग्नौ शंभौ च किं नु तत्तत्वम् ॥ ६१ ॥

**கோ ப்$^3$ரஹ்மணைருபாஸ்யோ கா$^3$யத்ர்யர்காக்$^3$னி கோ$^3$சர: ஶம்பு$^4$: ।**
**கா$^3$யத்ர்யாமாதி$^3$த்யே சாக்$^3$னௌ ஶம்பௌ$^4$ ச கிம் நு தத் தத்வம் ॥ 61 ॥**

**ब्रह्मणैः उपास्यः कः** = அந்தணர்களால் தியானம் செய்யத் தக்கது எது?
**ப்$^3$ரஹ்மணை: உபாஸ்ய: க:**

**गायत्र्यर्काग्निगोचरः शम्भुः** = காயத்ரி, சூரியமண்டலம், அக்னி இவற்றிலுள்ள பரமேசுவரன்
**கா$^3$யத்ர்யர்காக்$^3$னி கோ$^3$சர: ஶம்பு$^4$:**

**गायत्र्यां आदित्ये अग्नौ च शंभौ किं नु** = காயத்ரி, சூரியன், அக்னி, பரமசிவன் இவற்றில் உள்ளது எது?
**கா$^3$யத்ர்யாம் ஆதி$^3$த்யே அக்$^3$னௌ ச ஶம்பௌ$^4$ கிம் நு**

**तत् तत्वं** = அது உண்மைப் பொருள்.
**தத் தத்வம்**

காயத்ரி, ஸூரியமண்டலம், அக்னி இவைகளில் பரமேசுவரனை பிராமணர்கள் தியானிக்கவேண்டும். காயத்ரியிலும், ஸூரியனிடத்திலும், ஆக்னியிலும், சம்புவிடமும் உண்மைப்பொருளான பரப்ரஹ்மத்தின் பிரகாசமுள்ளது. **(61)**

**प्रत्यक्ष देवता का माता पूज्यो गुरुश्च कस्तातः ।**
**कः सर्वदेवतात्मा विद्याकर्मान्वितो विप्रः ॥ ६२ ॥**

**ப்ராத்யக்ஷ தே³வதா கா மாதா பூஜ்யோ கு³ருஶ்ச கஸ்தாத꞉ ।**
**க꞉ ஸர்வ தே³வதாத்மா வித்³யா கர்மான்விதோ விப்ர꞉ ॥ 62 ॥**

| | | |
|---|---|---|
| **प्रत्यक्ष देवता का**<br>**ப்ராத்யக்ஷ தே³வதா கா** | = | நேரில் காணும் தெய்வம் யார்? |
| **माता**<br>**மாதா** | = | தாயார் |
| **पूज्यश्च गुरु क**<br>**பூஜ்யஶ்ச கு³ரு க** | = | பூஜிக்கத்தக்க பெரியவர் யார்? |
| **तातः**<br>**தாத꞉** | = | தகப்பனுர் |
| **सर्वदेवतात्मा कः**<br>**ஸர்வ தே³வதாத்மா க꞉** | = | எல்லா தேவதைகளின் உருவம் கொண்டவர் யார்? |
| **विद्याकर्मान्वितो विप्रः**<br>**வித்³யா கர்மான்விதோ விப்ர꞉** | = | அறிவு, அனுஷ்டானம் இவற்றுடன் கூடிய பிராமணர். |

நேரில் பார்க்கும் கண் கண்ட தெய்வம் தாயார். பூஜிக்கத்தக்க குரு தந்தை. ஞானம், அனுஷ்டானம் இரண்டும் நிறைந்த அந்தணர் எல்லா தேவதைகளின் உருவமாய் இருக்கிறுர். **(62)**

**कश्च कुलक्षयहेतुः सन्तापः सज्जनेषु योऽकारि ।**
**केषाममोघ वचनं ये च पुनः सत्यमौनशमशीलाः ॥ ६३ ॥**

**கஶ்ச குலக்ஷய ஹேது꞉ ஸந்தாப꞉ ஸஜ்ஜனேஷு யோ(அ)காரி ।**
**கேஷாமமோக⁴ வசனம் யே ச புன꞉ ஸத்ய மௌன ஶமஶீலா꞉ ॥ 63 ॥**

| | | |
|---|---|---|
| **कुलक्षयहेतुःश्च कः**<br>**குலக்ஷயஹேது꞉ஶ்ச க꞉** | = | வம்சத்தின் அழிவிற்கு காரணம் எது? |
| **सज्जनेषु यः सन्तापः अकारि**<br>**ஸஜ்ஜனேஷு ய꞉ ஸந்தாப꞉ அகாரி** | = | ஸாதுஜனங்களிடம் எந்த ஸந்தாபம் செய்யப் பட்டதோ (அது) |
| **केषां अमोघवचनं**<br>**கேஷாம் அமோக⁴வசனம்** | = | எவர்களுக்கு வீணுகாத வார்த்தை உள்ளது? |
| **ये च पुनः सत्यमौनशमशीलाः**<br>**யே ச புன꞉ ஸத்ய மௌன ஶமஶீலா꞉** | = | எவர்கள் எப்பொழுதும் உண்மை, மௌனம், அடக்கம் இவற்றை ஸ்வபாவமாகக் கொண்டவர்களோ. |

ஸாது ஜனங்களின் மனதில் தாபத்தை உண்டு பண்ணினால் நிர்மூலமாக அது வம்சத்தை அழித்துவிடும். உண்மை, மௌனம், அடக்கம் இவைகளை ஸ்வபாவ மாகக் கொண்டவர்கள் சொல்லும் வார்த்தை வீணாகாது கட்டாயம். பலனைக் கொடுக்கும். **(63)**

**किं जन्म विषयसङ्गः किमुत्तरं जन्म पुत्रः स्यात् ।**
**कोऽपरिहार्यो मृत्युः कुत्रः पदं विन्यसेच्च दृक्पूते ॥ ६४ ॥**

**கிம் ஜன்ம விஷயஸங்க³: கிமுத்தரம் ஜன்ம புத்ர: ஸ்யாத் ।**
**கோ(அ)பரிஹார்யோ ம்ருத்யு: குத்ர: பத³ம் வின்யஸேச்ச த்³ருக்பூதே ॥ 64 ॥**

| | | |
|---|---|---|
| **किं जन्म** <br> **கிம் ஜன்ம** | = | எது பிறப்பு? |
| **विषयसङ्गः** <br> **விஷயஸங்க³:** | = | விஷயங்களில் பற்றுதல். |
| **किं उत्तरं जन्म स्यात्** <br> **கிம் உத்தரம் ஜன்ம ஸ்யாத்** | = | எது பின் பிறவி ஆகும்? |
| **पुत्रः** <br> **புத்ர:** | = | புத்திரன் |
| **कः अपरिहार्यः** <br> **க: அபரிஹார்ய:** | = | தடுக்க முடியாதது எது? |
| **मृत्युः** <br> **ம்ருத்யு:** | = | மரணம் |
| **कुत्रः पदं विन्यसेत्** <br> **குத்ர: பத³ம் வின்யஸேத்** | = | எங்கே காலை வைக்கவேணும்? |
| **दृक्पूते** <br> **த்³ருக்பூதே** | = | கண்களால் பார்த்து பரிசுத்தமான இடத்தில் |

விஷயங்களில் பற்றுக்கொள்வது பிறவிக்குக் காரணம் நம்முடைய புத்திரன் நம் மறுபிறவியாவான். மரணத்தை யாரும் விலக்கமுடியாது. கண்ணால் பார்த்து பரிசுத்தமான இடம் என்று தெரிந்தபின் அங்கு காலை வைக்கவேண்டும். **(64)**

**पात्रं किमन्नदाने क्षुधितं कोऽर्थ्यो हि भगवदवतारः ।**
**कश्च भगवान्महेशः शंकरनारायणात्मकः ॥ ६५ ॥**

**பாத்ரம் கிம் அன்னதா³னே க்ஷுதி⁴தம் கோ(அ)ர்த்²யோ ஹி ப⁴க³வத³வதார: ।**
**கஶ்ச ப⁴க³வான் மஹேஶ: ஶங்கர நாராயணாத்மக: ॥ 65 ॥**

| | | |
|---|---|---|
| **अन्नदाने पात्रं किं** <br> **அன்னதா³னே பாத்ரம் கிம்** | = | அன்னத்தைக் கொடுப்பதில் பாத்ரம் (பெற்றுக்கொள்ள தகுதியுள்ளவன்) யார்? |

| | | |
|---|---|---|
| **क्षुधितं**<br>**க்ஷுதி⁴தம்** | = | பசியுள்ளவன் |
| **क अर्थ्य:**<br>**க அர்த்²ய:** | = | எவர் பூஜிக்கத்தக்கவர்? |
| **भगवदवतार:**<br>**ப⁴க³வத³வதார:** | = | பகவானுடைய அவதாரம் |
| **भगवान् महेश: क:**<br>**ப⁴க³வான் மஹேஶ: க:** | = | பகவானின மஹேசுவரன் யார்? |
| **शंकरनारायणात्म एक:**<br>**ஶங்கரநாராயணாத்ம ஏக:** | = | சிவனும் விஷ்ணுவும் சேர்ந்த ஒரே உருவமான சங்கரநாராயணர். |

அன்னதானம் பெறுவதற்கு நல்ல பாத்ரம் (தகுதியுள்ளவன்) பசித்தவன். பகவானுடைய அவதாரமூர்த்திகளை பூஜிக்கவேண்டும். சங்கரரும் நாராயணரும் சேர்ந்து ஒரே வடிவமாயுள்ள சங்கரநாராயணர்தான் பகவானின மஹேசர். **(65)**

**फलमपि भगवद्भक्ते: किं तल्लोकस्वरुपसाक्षात्त्वम् ।**
**मोक्षश्च को ह्यविद्यास्तमय: क: सर्ववेदभूरथ चोम् ॥ ६६ ॥**

**ப²லமபி ப⁴க³வத்³ப⁴க்தே: கிம் தல்லோக ஸ்வருப ஸாக்ஷாத்த்வம் ।**
**மோக்ஷஶ்ச கோ ஹ்யவித்³யாஸ்தமய: க: ஸர்வ வேத³ பூ⁴ரத² சோம் ॥ 66 ॥**

| | | |
|---|---|---|
| **भगवद्भक्तेरपि किं फलं**<br>**ப⁴க³வத்³ப⁴க்தேரபி கிம் ப²லம்** | = | பகவத்பக்திக்கு பலன் எது? |
| **तल्लोकस्वरुपसाक्षात्त्वम्**<br>**தல்லோக ஸ்வருப ஸாக்ஷாத்த்வம்** | = | அவருடைய லோகத்தையும் ஸ்வரூபத்தையும் நேரில் காண்பது |
| **मोक्षश्च क:**<br>**மோக்ஷஶ்ச க:** | = | மோக்ஷம் எது? |
| **अविद्यास्तमय:**<br>**அவித்³யாஸ்தமய:** | = | அக்ஞான நாசம் |
| **अथ च सर्ववेदभू: क:**<br>**அத² ச ஸர்வவேத³பூ⁴: க:** | = | எல்லா வேதங்களுக்கும் காரணம் எது? |
| **ओम्**<br>**ஓம்** | = | ஓம் என்னும் பிரணவம். |

பகவானுடைய லோகத்தையும், ஸ்வரூபத்தையும் நேரில் அறிந்துகொள்வது பகவத் பக்தியின் பலன். அவித்யை அடியோடு நீங்குவது மோக்ஷம். எல்லாவேதங்களுக்கும் மூலம் 'ஓம்' என்ற பிரணவம். **(66)**

## इत्येषा कण्ठस्था प्रश्नोत्तररत्नमालिका येषाम् ।
## वे मुक्ताभरणा इव विमलाश्चाभान्ति सत्समाजेषु ॥ ६७ ॥

**இத்யேஷா கண்ட²ஸ்தா² ப்ரஶ்னோத்தர ரத்ன மாலிகா யேஷாம் ।**
**வே முக்தாப⁴ரணா இவ விமலாஶ்வாபா⁴ந்தி ஸத்ஸமாஜேஷு ॥ 67 ॥**

**इति** = என்ற,
**இதி**
**एषा** = இந்த,
**ஏஷா**
**प्रश्नोत्तररत्नमालिका** = பிரச்நோத்தர ரத்நமாலையானது,
**ப்ரஶ்னோத்தர ரத்ன மாலிகா**
**येषां** = எவர்களுடைய,
**யேஷாம்**
**कण्ठस्था** = கழுத்தில் உள்ளதோ,
**கண்ட²ஸ்தா²**
**ते** = அவர்கள்,
**தே**
**मुक्ताभरणा इव** = நல்முத்து மாலை யணிந்தவர்கள்போல்,
**முக்தாப⁴ரணா இவ**
**सत्समाजेषु** = ஸாதுக்களின் கூட்டங்களில்
**ஸத்ஸமாஜேஷு**
**विमलाश्च** = பரிசுத்தர்களாக,
**விமலாஶ்வ**
**आभान्ति** = விளங்குகிறுர்கள்.
**ஆபா⁴ந்தி**

இந்த பிரச்நோத்தர ரத்னமாலிகை எவர்களுடைய கழுத்தில் விளங்குகிறதோ (இதை நெட்டுருப்பண்ணி கண்டஸ்தமாக்கி இதன் கருத்துக்களையும் மனதில் தரிக்கிறுர்களோ) அவர்கள் நல்முத்துமாலை ஆபரணம் அணிந்தவர்கள் போல் ஸாதுக்களுடைய கூட்டங்களில் பரிசுத்தர்களாக விளங்குகிறுர்கள் **(67)**

### ப்ரஶ்னோத்தர ரத்னமாலிகா
**முற்றும்.**